# அறம் வளர்த்த நம்பி

இயற்றியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை போஸ்ட், எலமனூர் ஸ்டேஷன்

திருச்சி ஜில்லா

1983



தபோவனத் தொடர் 8

| | |
|---|---|
| முதற் பதிப்பு | 1951 |
| இரண்டாம் பதிப்பு | 1952 |
| மூன்றும் பதிப்பு | 1953 |
| நான்காம் பதிப்பு | 1954 |
| ஐந்தாம் பதிப்பு | 1960 |
| ஆறும் பதிப்பு | 1983 |

திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
காரியதரிசியால் பிரசுரிக்கப்பட்டது



தபோவன அச்சுப்பள்ளி, திருப்பராய்த்துறை.

## பொருளடக்கம்







# புத்ரோத்தமன்

அறம் தலை நிறுத்தி வேதம்
அருள் சுரந்(து) அறைந்த நீதித்
திறம் தெரிந்(து) உலகம் பூணச்
செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோர்
இடர் துடைத்(து) ஏக ஈண்டுப்
பிறந்தனன் தன்பொற் பாதம்
ஏத்துவார் பிறப்ப றுப்பான்.

## குலமும் குணமும்

வாழ்க்கையைப் பற்றிய உண்மைகள் பல உள. அவைகளை அறிந்து அனுஷ்டிக்குமளவு மனிதன் மேலோன் ஆகிறான். அவ்வுண்மைகள் அலாதியாக மனித உலகை மட்டும் ஒட்டியவை என்று எண்ணலாகாது. உயிர்கள் அனைத்துக்கும் அவை பொதுவானவை. சிற்றுயிர்கள் வாயிலாகவும் அவ்வுண்மைகள் நிரூபிக்கப்படுவதை இயற்கையில் காணலாம். உலகப் பிரசித்திபெற்ற பந்தயக் குதிரைகள் சில இப்பொழுது இருக்கின்றன. அவைகளை வாங்குபவர்களும், விற்பவர்களும் அவைகளின் வரலாறுகளை முற்றும் ஆராய்கிறார்கள். மூன்று அல்லது நான்கு தலைமுறைகளாக அவைகளுக்குத் தாயாக, தந்தையாக அமைந்த வேறு குதிரைகளின் வரலாறுகளையும் குறித்து வைத்திருக்கிறார்கள். உயர்தன்மை அல்லது கீழ்மை பல பிறவிகளில் குடும்ப இயல்பாக வந்து அமைகின்றன என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. இந்நாளில் விலையுயர்ந்த நாய்களை வளர்ப்பவர்களும் உண்டு. அவர்களும் அத்தகைய வம்ச விருத்தாந்தத்தைக் கவனித்து வருகிறார்கள். "குலத்தளவே ஆகும்

குணம்" என்பது முதுமொழி. இப்பேருண்மை மனித உலகிற்கு இன்னும் விரிவாகப் பொருந்தும்.

## ரகு வம்சம்

இந்தியாவின் தேச சரித்திரமே சில ரிஷி வர்க்கங்களை ஒட்டியது என்பது ஆராய்ந்து பார்த்தால் புலப்படும். ரிஷிகள் இரு பிரிவாகப் பிரிக்கப்பட்டனர். முற்றிலும் பாரமார்த்திக விஷயத்திலேயே ஈடுபட்டவர்கள் பிரம்ம ரிஷி வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் ஆயினர். தெய்வீக விஷயத்தைத் தவிர வேறு ஒன்றிலும் அவர்கள் கருத்தைச் செலுத்தவில்லை. மற்றொரு கூட்டத்தார் ராஜ ரிஷிகள் என்று அழைக்கப்பட்டனர். அவர்கள் இவ்வுலக அலுவல்களையும் நன்கு கவனித்தார்கள். ஆத்ம தத்துவத்திலும் கருத்தைச் செலுத்தினார்கள். பல தலைமுறைகளாக அவர்கள் மேன் மக்களாகவே மண்ணுலகில் தோன்றியிருந்தது வெறும் குருட்டு வாய்ப்பன்று. வாழ்க்கைத் தத்துவத்தைத் தலைமுறை தலைமுறையாக அவர்கள் ஒழுங்காகக் கையாண்டதே அதற்குக் காரணமாகும். அத்தகைய உயர்ந்த குடும்பப் பரம்பரை ஒன்று ரகு வம்சம் என்பதாகும். தேவேந்திரனையும் வென்ற 'ரகு' என்ற ஆற்றல் படைத்த ஓர் அரசன் இவ்வம்சத்தில் தோன்றிய காரணத்தால் இவ்வம்சத்திற்கு இப்பெயர் உண்டாயிற்று என்பர். இது சூரிய குலத்தைச் சேர்ந்தது என்பது ஐதிகம். ரகுராமன் என்னும் நம் கதாநாயகன் இவ்வம்சத்தைச் சேர்ந்தவன்.

## நன்மக்கட் பேறு

அயோத்தி அரசனாகிய தசரதன் 'புத்திர காமேஷ்டி யக்ஞம்' என்னும் ஒரு வேள்வி வேட்டான். அவ் வேள்வி தீயைக் கொளுத்தும் ஒரு வெறும் சடங்கன்று. சத்புத்திர

ரைப் பெற்றெடுப்பதற்கான பரிபாகத்தை அவனும் அவனுடைய மனைவிமாரும் அடைந்ததே அதன் கோட்பாடு ஆகும். நல்ல விளைவுக்குப் பூமியையும் பண்படுத்தவேண்டும்; விதையையும் பாங்குடன் வைத்திருந்து பருவத்தில் விதைக்க வேண்டும். இக்கோட்பாடு மக்கள் விஷயத்தில் முற்றிலும் உண்மையானது. ஆனால் நவீன உலகம் அதை மறந்துவிட்டது. தான் போட்ட திட்டத்திற்கு ஏற்ற சத்புத்திரரைத் தசரதன் பெற்றெடுத்தான். தெய்வீகம் வாய்ந்த நான்கு புதல்வர்கள் அவனுக்கு வாய்த்தனர்.

ஏழை ஆனாலும் சரி, பணக்காரன் ஆனாலும் சரி குழந்தைகளுக்கு வயது ஐந்து ஆகும் வரையிலும் அவைகளுக்கு அரச ரீதியில் உரிமை கொடுத்துப் பாராட்டி வளர்க்க வேண்டும் என்பது ஐதிகம். அரசன் ஒருவனுக்கு அதற்கேற்ற இடம், பொருள், ஏவல் ஆகியவை அமைந்திருக்கையில் தன் மைந்தர்களை மாட்சிமை பொருந்தியவர்களாக அவன் வளர்த்ததில் வியப்பொன்றுமில்லை. சிசுக்களை வளர்ப்பதில் பொருள் மிகச் செல்வாகிறது; இதில் பிரயோஜனம் ஏதாவது உண்டா என்று வெறும் பொருளாதாரத்திலேயே கண்ணும் கருத்துமாயிருப்பவர்கள் கேட்கலாம். ஆம், அதில் பெரும் பயனுண்டு. ஐந்து வயது வரையில் சிசுக்களுக்கு அரசனது சுதந்திரமும் செல்வாக்கும் உண்டு. பொருள் அவர்கள் பொருட்டுச் செலவிடப்படுகிறது. அரசனுக்குக் குற்றேவல் புரிவது போன்று அவர்களுக்குப் பணிவிடை செய்யவேண்டும். அத்தனை விதமான கஷ்ட நஷ்டங்களுக்கிடையில்

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு

இதுதான் பெற்றோரும் மற்றோரும் சிசுக்களிடத்திருந்து உடனே அடையும் பயன். இவ்வின்பம் தெய்வீக இன்பமாகும்.

தலை மாணாக்கன்

இராமனுக்கு வயது ஐந்து முடிகிறது. வாழ்க்கையில் இரண்டாவது அத்தியாயம் உடனே துவங்குகிறது. ஐந்தாவது வயதிலிருந்து மாணாக்கன் என்ற பருவம் ஆரம்பிக்கிறது. முதியோருக்குப் பணிவிடைசெய்வது அதன் முக்கியப் பகுதியாகும். பழைய இந்திய ஐதீகத்தின்படி ஐந்தாவது வயதிலிருந்து பதினாறுவது வயது வரையில் இளைஞன் ஒருவன் முதியோருக்கு அல்லது சமூகத்திற்கு ஏவலாளனாக இருத்தல் வேண்டும். இக்கருத்துப் பற்றியே வள்ளுவரும் 'உடையார் முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்' என்று கற்கும் முறையை வலியுறுத்திச் சென்றார். அதன் பிறகே தோழன் என்ற பதவிக்கு அவன் உயர்த்தப்படுகிறான்.

விசுவாமித்திரர் என்னும் மகரிஷி தசரத சக்கரவர்த்தியிடம் வருகிறார். வந்தவரை வேந்தனும் உவகையுடன் வரவேற்கிறான். தன்னிடத்து இருப்பதை வேண்டியவாறு எடுத்து வழங்க வேந்தன் தானே முனிவருக்கு வாக்குக் கொடுக்கிறான். அம்முனிவரோ தமது யாகம் இனிது நிறைவேறுவதற்கு அதைக் காக்க கோசலை நந்தனாகிய ராமச்சந்திரனை அனுப்பி வைக்கும்படி பணிக்கிறார். புத்திரனை விட்டுப் பிரிய வேந்தன் வருந்துகிறான். தானே வந்து அப்பணியாற்ற இசைகிறான்; அல்லாவிடின் தக்க வேறு ஆதரவை அனுப்புவதாக உறுதி கூறுகிறான். முனிவரோ தமக்கு வேண்டுவது இராமனைத் தவிர வேறு யாருமல்லர் என்று தாம் கேட்டதையே சாதிக்கிறார். செய்யக் கிடப்பது இனி வேறு ஒன்றுமில்லை. கொடுத்த வாக்குப்படி இளங்குமாரனை

மன்னன் அனுப்பி வைக்கிறான். பிறந்தது முதல் என்றும் இராமனை விட்டு இணைபிரியாதிருந்த இலக்ஷ்மணனும் உடன் செல்கிறான்.

இனி, சமூகப் பணிவிடை என்பதும் வாழ்க்கைப் பயிற்சி என்பதுமாகிய இரண்டு இயல்புகள் அவர்களுக்கு இச்செயலின் வாயிலாக அமைகின்றன. பூமியில் விதை விதைக்கிறோம்; இளம்பயிராக அது முளைக்கிறது. பிறகு அதைப் பெயர்த்தெடுத்து வேறு இடத்தில் நட்டால்தான் அது நல்ல பயிராக வளரும். சிறு பிள்ளைகள் அங்ஙனம் காலமெல்லாம் பிறந்த வீட்டிலேயே இருப்பது பொருந்தாது. நல்ல பயிற்சி பெறுவது வாழ்க்கைக்கு அவசியமென்றால் அதன் பொருட்டு அவர்கள் புதிய சூழ்நிலைக்கு எடுத்துச் செல்லப்பட வேண்டும். இராமனுக்கும் இலக்ஷ்மணனுக்கும் இவ்வசதி விசுவாமித்திரர் வாயிலாக நிறைவேறிற்று.

**கல்வி பயிலுதல்**

விசுவாமித்திரருடைய யாகத்தை இளைஞர் இருவரும் அவர் காட்டித் தந்தபடி காப்பாற்றினார்கள். அரக்கர் வாயிலாக அவ்வேள்விக்கு விக்கினங்கள் பல வந்து கொண்டிருந்தன. இராமனும் இளையவனும் படைத்திருந்த பராக்கிரமத்தைச் செயலுக்குக் கொண்டு வருவதற்கு அது நல்ல சந்தர்ப்பமாயிற்று. அவர்களுடைய வல்லமை வெளியானதே அவ்வேள்வியின் விளைவு என்று சொல்லலாம். விசுவாமித்திரரும் ஆற்றல் படைத்த இளைஞர்பால் அன்பு கொண்டு, புதிய அஸ்திர சஸ்திரங்களைக் கையாள அவர்களுக்குக் கற்றுக்கொடுத்தார். அக்காலத்து ஆயுதங்களுக்கும் இக்காலத்து ஆயுதங்களுக்கும் பெரிய வேற்றுமை உண்டு. பீரங்கி, அணுகுண்டு, சுரங்கம் முதலியன இயற்கையிலுள்ள ஜடப் பொருள்களின் வல்லமையை விளக்குகின்றன. அந்

நாளில் இராமன் போன்றவர்கள் கையாண்ட அஸ்திரசஸ்திரங்கள் மனேசக்தியோடு சம்பந்தப்பட்டவைகள். தவ வலிவில்லாத ஒருவன் அவைகளைக் கையாள முடியாது. ஆகையால்தான் அக்கலைஞானம் நாளடைவில் மறைந்து போய் விட்டது. ஆனால் அந்நாளில் இராமனிடம் அவை யாவும் விசுவாமித்திரரால் கொடுக்கப்பட்டன. அவனே அவைகளை ஏற்பதற்கேற்ற சத்பாத்திரமாக விளங்கினன். உலக நன்மையின் பொருட்டு அவைகள் உபயோகப்படுத்தப்பட வேண்டுமென்ற ஆணையும் முனிவரிடமிருந்து அவனுக்குப் பிறந்தது. குருகுலவாசத்தில் இராமன் பெற்ற சீரிய பயிற்சி இதுவே. ஒழுக்கம் ஒன்றே தன்னளவில் மனிதனுக்கு விழுப்பம் தருகிறது. முதியோருக்கு அடிபணிந்து நடத்தல் மாணக்கனது மாண்பு ஆகிறது. மனமுவந்து அவன் பணிவிடையும் பண்ணுவானுகில் பண்பு அனைத்தும் அத்தகைய இளைஞனுக்குச் சொந்தமாய் விடுகிறது. இராமனிடத்தோ ஒழுக்கமும், அடிபணிதலும், பணிவிடை பண்ணுதலும் ஒன்று சேர்ந்திருந்தன.

## இராமனின் கை வண்ணம்

விசுவாமித்திரருடன் இராமன் மிதிலைக்குச் சென்றான். அவ்வூருக்கு அவன் அப்பொழுது வேற்றானுயிருந்தான். "தோள் கண்டார் தோளே கண்டார்; தொடுகழற் கமல மன்ன தாள்கண்டார் தாளே கண்டார்" என்னும்படி அவனுடைய வடிவழகை முற்றிலும் பருக இயலாமல் திகைத்தனர் மிதிலை மக்கள். மிதிலாபுரியை ஆண்டுவந்த ஜனக மஹாராஜாவின் முன்னிலைக்கு அவன் அழைத்துச் செல்லப்பட்டான். இராமன் வெறும் அழகன் தானு அல்லது ஆற்றலும் அவனிடத்து உண்டா என்ற சோதனைக்கு அவன் உட்பட்டான். பலர் சேர்ந்து வலிமை பொருந்திய சிவதனுசை

இராமன் முன்னிலையில் கொண்டு வந்து வைத்தனர். இராமன் அதனருகில் சென்று, அதனை எடுத்தது கண்டனர் சபையோர்; உடனே இற்றது கேட்டனர். ஆனால் வளைத்தது கண்டிலர் என்று கூறுமாறு இமைப்பொழுதில் அத்தனுசை இறுத்தனன் இராமன். பின்பு அவனுக்கு விவாகம் நடைபெற்றது. சீதை அவனுக்கு வாழ்க்கைத் துணைவியானாள். இல்வாழ்வு என்னும் பகுதியில் பிரவேசிக்க இப்பொழுது அவன் முழுவதும் தகுதியுடையவன்.

மிதிலையினின்று அயோத்திக்குத் திரும்பி வந்துகொண்டிருந்தபொழுது நிகழ்ச்சி ஒன்று நேர்ந்தது. தசரத ராமனுடைய வீரமும் மனபரிபாகமும் அதன் வாயிலாக வெளியாயின. க்ஷத்திரியக் கூட்டத்தை அறவே வேரறுத்து வந்த பரசுராமன் இக்கூட்டத்தை எதிர்த்தான். அனைவரும் நடு நடுங்கும்படி அவன் செய்துவிட்டான். யுவன் ஆகிய இராமனையும் வம்புச் சண்டைக்கிழுத்தான். "க்ஷத்திரியச் சிறுவ, துருப்பிடித்துப் போன சிவனார் வில்லை ஒடித்து, நீ சிறப்புப் பெற்று விட்டாய் போலும்! அது போதாது. இதோ நான் தருகின்ற விஷ்ணு தனுசை ஏந்தி நாணேற்று. பின்பு என்னுடன் மல்யுத்தத்திற்கு வா; அல்லையேல், உன்னையும் உன் வம்சம் முழுவதையும் அதம் செய்து விடுவேன்" என்று கர்ஜித்தான். இடி விழுந்தாற்போன்று அனைவரும் மெய்ம் மறந்து நின்றனர்.

ரகுராமனோ அமைதியும் இனிமையும் பணிவும் வடிவெடுத்தவனாகக் கைகூப்பி நின்று பகர்வானாயினன்: "பிரபோ! அடியேன் அரசகுலத்தில் உதித்ததற்கு என் கடவேன்! அது தற்செயலாய் நிகழ்ந்தது. தம்போன்ற மேலோர் இங்ஙனம் சினந்துகொண்டால் சாந்தத்தை என் போன்ற சிறுவர் எங்குச்சென்று யாரிடம் காண்பது? தேவரீர்

ஆக்ஞாபித்தால் ஆவதைச் செய்கிறேன்," என்றான். பணிவுக் கிடையில் உறுதியே வடிவெடுத்தவனாகவும் நின்றான். செருக்கு நிறைந்த பரசுராமன் விஷ்ணு வில்லை நீட்டினான். தசரதராமன் லாகவமாக அதைக் கையில் வாங்கி வளைத்து நாணேற்றினான். மேலும் இராமன் பரசுராமரைப் பார்த்து, "தேவரீர் ஆக்ஞையை முடிந்தவரையில் இதோ நிறைவேற்றி யுள்ளேன்; மேலும் நானொன்று மொழிவதைத் தேவரீர் கேட் டருள்க. நாமேற்றிய நாண் வீண்போவது கிடையாது. இந்த அம்புக்கு இலக்கு எது என்று இயம்பியருள்வீராக" என்றனன்.

விஷ்ணு வில் வளையவே, பரசுராமனது செருக்கும் பறந் தோடியது; ஆணவ அக்ஞானமும் அகன்றது; உண்மை ஞானம் உதித்தது. தன் எதிரே வாலிப உடல் தாங்கி நின்றது எத்தகைய புருஷன் என்பதை அவன் உணர்ந்தான். தனக்குற்ற வீண் கர்வமெல்லாம் தனது புண்ணியச் செயலை முன்னிட்டே என்பதை இப்பொழுது அறிந்துகொண்டான். ஒரு மனிதன் நலமே செய்யலாம்; ஆனால் நலத்தை முன்னிட் டுக் கர்வம் கொள்ளலாகாது. நலமனைத்தையும் வீண் கர் வம் பாழாக்கிவிடுகிறது.

"என் கர்வத்தின்மீது உமது பாணத்தை ஏவும்" என் றான் பரசுராமன். இராமனும் அங்ஙனமே செய்தான். செருக் கொழிந்து தெளிந்த மனமுடையவனாய் அவன் மேலும் தவம் புரியப் போய்விட்டான்.

## திருவும் துறவும்

அயோத்தி ராமனுக்கு இளவரசுப் பட்டாபிஷேகம் பெறுதற்கு ஏற்ற பருவம் வந்துவிட்டது. மன்னனும் மற்ற வர் கருத்தை ஒட்டி அவனுக்கு இளவரசு முடிசூட்ட முடிவு

செய்தான். அயோத்தி நகரெங்கும் ஒரே ஆனந்த ஆரவாரம். குடிகளெல்லாம் மகுடாபிஷேகம் காண மகிழ்வுற்றிருந்தனர்.

ஆனால், வாழ்க்கையின் முழு மர்மத்தையும் யார் அறிவார்? 'உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா' என்பதை ஓயாது பார்த்துக்கொண்டிருந்தும் அதை உள்ளத்தில் வைத்து அதற்கேற்றபடி வாழ்வில் பற்றற்றிருப்பவர் யார்? அடுத்தநாள் நாடு ஆள்வதற்கிருந்த நம்பிக்குத் திடீரென்று ஆணைபிறந்தது. தசரத சக்கரவர்த்தியின் பிரதிநிதியாக இளவரசனது மாற்றாந் தாய் கைகேயி இராமனைக் காடு ஏகும்படி ஆக்ஞாபித்தாள். வரங்கொடுக்க முன்பொரு நாள் வாக்குக் கொடுத்த மன்னன், அதை மறுத்து ஒன்றும் மொழிய முடியவில்லை. உயிரற்ற உடல் போன்று அவன் அமர்ந்திருந்தான். சிற்றன்னையின் ஆணையும், தந்தையின் ஆணையும் ஒன்றே என்று இராமன் பொருள்படுத்தினான். "மெய்த் திருப்பதம் மேவு" என்று தந்தை கூறியபொழுதும், "இத் திருத் துறந்து ஏகு" என்று தாய் ஆணையிட்டபொழுதும் அவன் முகம் சித்திரத்தில் அலர்ந்த செந்தாமரையினை ஒத்திருந்தது. "இப்பணி தலைமேற்கொண்டேன்; மின்னொளிர் கானமின்றே போகின்றேன்; விடையும் கொண்டேன்" என்று தாயிடம் கூறிவிட்டு, கணப்பொழுதேனும் கால தாமதம் செய்யாது, அவன் காடு ஏகினான். இராமனுக்கு நிழல் போன்ற இலக்ஷ்மணனும் அடவிக்கு அவனைப் பின் தொடர்ந்தான். இனி, சீதை என் செய்தாள் என்பது கேள்வி. இராமன் இருக்கும் இடமே அவளுக்கு அயோத்தி. கணப்பொழுதேனும் கொண்டவனை விட்டுப் பிரிய அவள் ஒருப்படவில்லை. "காடு சுடும்" என்று இராமன் கூறியதற்கு, "நும் பிரிவினும் சுடுமோ?" என்று கேட்டனள் ஜானகி. எனவே, அவளும் இராமனைப் பின்பற்றி ஆரண்யம் ஏகினாள்.

### பற்றற்ற வாழ்வு

இராமனும் சீதையும் காட்டிலே, மரத்தடியிலே,உலர்ந்த சருகின்மீது படுத்து உறங்குகின்றனர். உறக்கம் யாருக்குச் சொந்தம்? கவலைக் கடலில் அழுந்துபவர்க்கும் உறக்கத்துக்கும் வெகுதூரம். அவர்களுக்குச் சிறிது உறக்கம் பிடித்தால் அது கனவு நிறைந்த கண்ணயர்வு. ஆனால் அவர்களைக் காத்து நிற்கும் தம்பி இலக்ஷ்மணனுக்கு இங்கு இராமன் கொடுக்கும் காட்சிதான் என்ன? நேற்றிரவு அயோத்தியிலே, ராஜ வைபவங்களுக்கிடையிலே, இளவரசன் ஆகக்கூடிய மனக் கோட்டை கொண்டவனைப் படுக்கச் சென்றான்; இன்றிரவு நாடு கடத்தப்பட்டவனாய், அனாதையாய், கால் நலிய நடந்து வந்தவனாய், மரத்தடியில் படுத்துக் கிடக்கிறான். இவ்வளவு பெரிய மாறுதல் ஒருவனுடைய வாழ்விலே இவ்வளவு விரைவில் வரமுடியுமா? ஆம், சக்கரவர்த்தித் திருக்குமாரனாகிய இராமனுக்கு அது வந்துவிட்டது. அதைக் குறித்து ஊரெல்லாம் ஏக்கமுற்றுக் கிடக்கிறது. ஆனால் இராமன் என்பவன் யார் என்பதை இராமன் செயல் விளக்குகிறது. வானளாவும் மாளிகையில், இந்திரபோகம் நிறைந்துள்ள சூழ்நிலையிலே, நவமணியிழைத்த மஞ்சத்தில் படுத்துறங்குவதும், அதற்கு நேர்மாறாக வனத்தில் புழுதிபடிந்த நிலத்திலே, கவனிப்பாரற்றுக் கிடப்பதும் ராமபிரானுக்கு ஒன்றே. படகு தண்ணீரில் இருக்கலாம்; ஆனால் படகுக்குள் தண்ணீர் நுழையலாகாது. மனிதன் உலகில் இருக்கலாம்; ஆனால் உலகப்பற்று மனிதனுடைய உள்ளத்தில் புகுந்துவிடலாகாது. இராமனுக்கு உலகப்பற்று என்பது எள்ளளவும் இல்லவே இல்லை. நாடு ஆள்வதும், காட்டில் தவம்புரிவதும் அவனுக்கு ஒன்று. ஆகையால்தான் அவன் கவலையற்று உறங்க வல்லவனானான். அவனது பாங்கை விளக்க அச்செயல் ஒன்றே போதுமானது.

பற்றற்றநிலை வாழ்க்கைக்கு முதற்படி. வாழ்வில் என்ன தான் மாறுதல் உண்டானாலும் பற்றற்றான் ஒருவன் அதைக் குறித்து மனக்கிலேசம் அடையான்.

## தந்தை சொல் கடவாத தனயன்

சித்திரகூடமென்னுமிடத்தில் பர்ணசாலை அமைத்துக் கொண்டு, இராமனும் சீதையும் இலக்ஷ்மணனும் இனிது வனவாசம் செய்துவந்தனர். உயர்ந்த தெய்வீக விஷயங்களில் அவர்களது உள்ளம் உறைந்திருந்தது. அழகிய வனம் என்னும் மண்ணுலகச் சூழ்நிலையில் அவர்களுடைய உடலங்கள் வசித்து வந்தன. உள்ளமோ பரத்தைச் சார்ந்து, பரமானந்தத்தில் திளைத்திருந்தது. இந்நிலையிலே இராமனைக் காணத் தம்பி பரதன், உற்றார் உறவினர் சேனை முதலியன புடைசூழக் கானகம் ஏகுகிறான். தமையன்மீது பெருவாஞ்சை வைத்திருந்த இலக்ஷ்மணன், ஒருவேளை அண்ணனை எதிர்க்கத்தான் அவன் இவ்வளவு ஆடம்பரமாக வருகிறானே என்று ஐயமுறுகிறான். "இளையோய், பரதன்மீது சந்தேகம் கொள்ளாதே;

"பொன்னெடும் பொருகழல் பரதன் போந்தனன்
நன்னெடும் பெரும்படை நல்கல் அன்றியே
என்னெடும் பொரும்என இயம்பற் பாலதோ."

வேண்டுமானால் அவன் ராஜ்யத்தை உன்னிடம் கொடுத்து விட்டு, என்னுடன் இங்கு வனவாசம் செய்ய மகிழ்ந்து இசைவான்" என்கிறான் இராமன். அதைக் கேட்ட இளையவனுக்கு வெட்கம் மேலிட்டது. இதற்குள் பரதனும் மாசடைந்த மெய்யினனாய், வற்கலையுடுத்து, தவ வேடம் பூண்டவனாய்ப் பிரசன்னமாகிறான். உடன் பிறந்தார் நால்வரும் சித்திரகூடத்தில் சந்தித்து தந்தை மறைந்ததைக் குறித்து

மிகவும் வருந்துகின்றனர். பிறகு, இராமனுக்கும்,பின் பிறந்த பரதனுக்குமிடையில் பெரியதொரு விவாதம் நிகழ்ந்தது. சோக ரசம் நிறைந்த விவாதம் அது. உலகப் பொருள்களை எல்லாம் அப்படியே அபகரிக்க முயல்வது மாந்தரது இயல்பு. அதற்கு நேர் மாருக இருவரும் அரசாட்சி வேண்டாம், தவக்கோலமும் வனத்தில் எளிய வாழ்க்கையுமே தத்தமக்குப் போதுமென்று போராடுகின்றனர். எல்லாம் தனக்கு வேண்டுமென்ற போராட்டத்துக்கும் ஒன்றும் தனக்கு வேண்டாம் என்ற போராட்டத்துக்கும் இடையிலே எவ்வளவு பெரியவித்தியாசம் இருக்கிறது! வேண்டும் என்பவனுடைய துயரம் மருள் நிறைந்தது. வேண்டாம் இவ்வுலக வைபவம்; எளிய வாழ்க்கையும் சீரிய எண்ணமுமே கிட்ட வேண்டும் என்று துயருறுபவனது துயரம் அருள் நிறைந்தது.

"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்"

என்னும் மஹா வாக்கியத்துக்கிலக்காக இலங்கி நின்றனர் உடன் பிறந்த அரசகுமாரர் இருவரும். இறுதியாக இராமன், "சூரியன் ஒளியை இழக்கலாம்; பனிக்கட்டி தண்மையை இழக்கலாம்; தந்தைக்கு நான் கொடுத்த வாக்கை மாற்றேன். என் மீது உனக்கு அன்பு இருக்குமாயின் தந்தையைப் பொய்யாமொழியன் என்று நிரூபிக்க நீயும் துணைபுரிவாயாயின், நீ நாடு சென்று ஆட்சிபுரிவாயாக" என்று ஆக்ஞாபித்தான். பரதனும் மூத்தவனது பிரதிநிதியாகப் பாருலகைப் பரிபாலிக்க இசைந்து, நாடு ஏக ஒருப்பட்டான். அப்படிப் புறப்பட்டவன் அயோத்தியின்கண் இராமனுடைய ஆட்சி தான் இருந்தது என்பதற்கு அறிகுறியாக, அவனுடைய பாதுகைகளை ஏற்று, சிரமீது தாங்கி, அவனுடைய தொண்டனைத் திரும்பிச் சென்றான்.

வையத்து வாழ்முறை

யார் யார் எத்தகைய கண்கொண்டு காண்கிருர்களோ, அத்தகைய காட்சி கொடுக்கிறது இவ்வுலகம். பற்றுடையார்க்கு இவ்வுலகம் ஓயாத போர்க்களம். போட்டியையும் பொருமையையும் எங்குத் திரும்பினுலும் காணலாம். இதே இவ் வையகம் பற்றற்ருருக்கு மற்றெருவிதக் காட்சி கொடுக்கிறது. வேண்டாம் என்று விட்டவனுக்கு எல்லாம் சொர்க்கம் போன்றது; இனிமையும் சாந்தமும் அருளுமே நிறைந்தது இவ்வுலகம். நம்மில் யார் கேடுடையவரோ அவருக்கு இவ்வுலகம் கேடுடையதாகத் தென்படும். மனத்தகத்து மாசு இல்லார் எல்லாரும் நலமுடையார் ஆகின்றனர். நலமுடையார்க்கு உலகம் முழுவதும் நலமே நிறைந்ததாகக் காட்சி கொடுக்கும். அவரவர் முகத்தின் பாங்கைத்தான் கண்ணுடியில் காண்கிறேம். அங்ஙனமே அவரவர் மனத்தின் பாங்கை இப்பேருலகில் காண்கிறேம். ‘மனம்போல மாங்கல்யம்’ என்ற முதுமொழியின் கருத்தும் இதுவேயாம். தசரத ராஜகுமாரர்கள் அங்ஙனம் மாசற்ற மனமுடையவராய் மிளிர்ந்தனர்.

---

# வாலி தொடுத்த வழக்கு

## மனதின் இயல்பு

ஓர் அழகிய இனிய இடத்துக்கு வந்தால் இன்புறுவோர் ஆங்கு அதிகம் இன்பம் அடைகின்றனர். அதே இடத்தில் துன்புறுவோர் ஆழ்ந்து துன்பத்தில் ஈடுபடுகின்றனர். அவரவர் மனநிலையைப் பன்மடங்கு அதிகப்படுத்திவிடவல்ல ஆற்றல் அழகிய இடத்தின்கண் இருக்கிறது. இது விந்தையினும் விந்தை அன்றோ! பம்பை என்னும் பொய்கைப் பக்கத்தில் இராமனும் அவன் உடன்பிறந்தவனும் அலைந்து திரிந்து வந்தார்கள். இயற்கையானது எங்குத் திரும்பிப் பார்த்தாலும் அழகை வாரிக் கொட்டிக்கொண்டிருந்தது. இது விழித்திருந்து காணும் காட்சியா, அல்லது ஒரு சொப்பன உலகமா என்ற ஐயம் யாருக்குமே வந்துவிடும். இதைக் காணலுற்றதும் இராமன் கதறி அழ ஆரம்பித்து விட்டான். "அந்தோ! சீதை இப்பொழுது இங்கு உயிரோடு என்னுடன் இருந்தால் இந்த இயற்கை வனப்பைக் கண்டு எவ்வளவு மகிழ்வு எய்தியிருப்பாள்! அவள் எங்கேனும் சிறைபட்டுக் கிடக்கின்றாளோ, அல்லது இவ்வுலகினின்றே மறைந்துபோய்விட்டாளோ! இத்தகைய பரிதாபகரமான முடிவை அவள் அடைவதற்காகவா ஜனக மகாராஜன் அவளை என்னிடம் துணைவியாக ஒப்படைத்தார்?" இப்படி எல்லாம் பலவாறாகப் பிதற்றிக்கொண்டு பிரலாபித்தான். துயர் உற்றவர்களாய் அவ்விருவரும் இந்தப் பம்பைத் தடாகத்துக்கு அருகில் இருந்த ருச்சியமூக மலையின் அடிவாரத்துக்கு வந்தார்கள். அடர்ந்த வனம்; பகலிலும் சூரிய வெளிச்சம் பூமிக்கு எட்டுவது இயலாத காரியம். ஆங்கு உடன்பிறந்தார் இருவரும் வரவே, வானரங்கள் சில

மருண்டு ஓட்டம் பிடித்தன. எனினும், சிறிது நேரத்துக்குள் அவைகள் கொடுத்த காட்சி அறவே மாறிவிட்டது. உடல் வலிவும் மனவுறுதியும் படைத்த குரங்கு ஒன்று மற்றொன்றின் கையைப் பிடித்துக்கொண்டு ஏசுவது போன்று ஏதோ பேசிற்று. அவைகளுக்கிடையில் ஆலோசனை முடிந்ததும் அவ்வலிவு படைத்த குரங்கு தனியாக இந்நரர்களைச் சந்திக்க வந்தது.

உள்வு அறிதல்

தோட்டத்தில் இருக்கும் காய் கனிகளைத் தந்திரமாகத் திருடிக்கொண்டு போகவேண்டுமென்று சிறுவன் ஒருவன் அதனுள்செல்கிறான் என்று வைத்துக்கொள்வோம். வேடிக்கை பார்ப்பவன் போன்று அவன் முதலில் இங்குமங்கும் சுற்றித் திரிகிறான். அப்பொழுது ஒருவன் திடீரென்று அவன் முன் தோன்றி, "அடே சிறுவா, நீ இங்கு வந்தது முதல் உன்னை நான் கவனித்துக்கொண்டிருக்கிறேன். எதற்காக நீ இங்கு வந்துள்ளாய் என்பது எனக்குத் தெரியும்" என்று அதட்டு வானாகில், அவன் மனத்தில் இருப்பது என்ன என்பதை முகக்குறி காட்டிவிடும். இது மன இயல்பைப் பற்றிய ஓர் உண்மை.

இராமனையும் அவன் தம்பியையும் இப்போது காண வந்தவன் வாயு குமாரனாகிய ஆஞ்சனேயன்; எதற்கும் அஞ்சா வீரன். மஹாவீரன் என்றால் அது அவனுக்கே தகும். இவ்விருவரையும் வந்து ஏறிட்டுப் பார்த்தான். பின்பு பகர்வானாயினன்:—"தேவர்போன்று தென்படும் இளம் நரர்காள், உங்களை நெடுநேரம் நான் உற்றுக் கவனித்து வந்தேன். விதவிதமான ஆயுதங்கள் தாங்கியவர் களாய், ஆனால் அதே வேளையில் தவக்கோலம் போட்டுக் கொண்டு யாரை ஏமாற்றுதற்கு அல்லது துன்புறுத்துதற்கு

இங்கு வந்துள்ளீர்கள்? உள்ளதை ஒளியாது சொல்லுங்கள். உங்களை எளிதில் விடமாட்டேன்.'' இவ்விதம் பசுமரத் தாணிபோன்ற பேச்சை அவன் பகர்ந்தான்.

புன்முறுவலுடன் அவனது பொன்மொழியைக் கேட்டுக் கொண்டிருந்த இராமன், இளையவனிடம் இயம்பியதாவது:- "தம்பீ, இவன் சொல்லைக் கேட்டாயா? மொழியின் தெளிவும் இனிமையும் இவன் கல்விமான் என்பதைக் காட்டுகின்றன; உறுதியே வடிவெடுத்தவன் என்பதை இவனது முக விலாசம் விளக்குகிறது. இவனோடு உறவுகொள்வது நமக்கு நன்மை பயக்கும். அவன் கேட்ட கேள்விக்கு விடையளி.''

பிறகு, தசரத குமாரனுக்கும் குரங்கு வடிவம் எடுத்த வாயு புதல்வனுக்கும் இடையிலே சுருக்கமாகப் பேச்சு வார்த்தை ஏதோ நடைபெற்றது. இருவர் முகத்திலும் திருப்தியும் பரஸ்பர நம்பிக்கையும் மிளிர்ந்தன. வாயு குமாரனுக்கு ஹனுமான் என்பது மற்றொரு பெயர். பருத்த கன்னத்தை உடையவன் என்பது அதன் பொருள். அவன் இவ்விருவரையும் மற்ற குரங்குகளிடத்து அழைத்துச் சென்றான்.

மருண்டு ஓடியவர்கள் வேறு யாரும் அல்லர்; கிஷ்கிந்தாபுரிக்கு அரசனாகிய வாலியின் தம்பி சுக்ரீவனும் அவனுக்குத் துணையாக நின்ற மூன்று நான்கு வானரர்களுமே ஆவர். அவர்களிடம் வனவாசிகளாகிய ராம லக்ஷ்மணர் அறிமுகப் படுத்தப்பட்டனர். "ஏன் எங்களைக் கண்டதும் நீங்கள் இப்படிப் பயந்து ஓட்டம் பிடித்தீர்கள்?" என்று இராமன் கேட்டான். தன் வரலாற்றைச் சுக்ரீவன் சோக ரசத்திலே, தழுதழுத்த குரலிலே மொழிந்தான். "என் அண்ணன் என் மனைவியை அபகரித்துக்கொண்டான்; என்னை அவமானப் படுத்தினான்; பிறரைக்கொண்டு கொல்லவும் முயன்றான்;

எப்படியாவது என்னை ஒழித்துவிட வேண்டும் என்ற எண்ணம் அவனுடைய மனத்தைவிட்டு இன்னும் அகலவில்லை. ஒரு சாபத்துக்கு அஞ்சி அவன் நுழைய முடியாத இந்த ருச்சியமூகமலையில் நான் அடைக்கலம் புகுந்திருக்கிறேன். நீங்கள் இருவரும் இங்குத் தோன்றியதும் ஏதோ அவனுடைய ஒருவித சூழ்ச்சியாக இருக்குமென்று அஞ்சி ஓடினோம். அதைத்தவிர வேறு ஒன்றுமில்லை. ராமா, நான் இப்பொழுது திக்கற்றவன் ஆகிவிட்டேன். ஹனுமானும் மற்றவர்களும் எனக்குத் துணையாயில்லாது போயிருந்தால், நெடுநாளைக்கு முன்பே நான் உயிர் துறந்திருப்பேன். நீ ஏதேனும் ஒரு விதத்தில் எனக்கு உதவிபுரிய மாட்டாயா?"

## பிரச்னை எல்லார்க்கும் ஒன்றே

அன்று இராமன் வாழ்ந்த காலத்தில் உலகில் இருந்தவர்களுக்கிடையில் நெருங்கிய தொடர்பு இல்லை. அவரவர் நாட்டில் அவரவர் வாழ்ந்து வந்தனர். கிணற்றுத் தவளை போன்று ஒவ்வொருவருக்கும் அவரவர் அறிந்த நாடே பரந்த தொல்லுலகு ஆயிற்று. ஆனால் இன்றைய நிலைமை அத்தகையதன்று. பரந்த இப்பூவுலகம் மிகச் சிறியதுபோன்று ஆகிவிட்டது. எல்லா நாடுகளுக்கிடையிலும் நேர்முகமாகவோ மறைமுகமாகவோ தொடர்புண்டு. ஒரு நாட்டில் யுத்தம் என்றால் ஏதேனுமொரு விதத்தில் எல்லா நாடுகளும் அதில் சம்பந்தப்பட்டவைகள் ஆய்விடுகின்றன. ஒருநாட்டுக்கு நலம் என்றால் மற்ற நாடுகளுக்கும் அது துணைபுரிய வல்லதாகிறது. காலம் செல்லச் செல்ல, இக்கோட்பாட்டைக் கண்கூடாகக் காண்கிறோம். ஆனால் அந்நாளிலோ வாழ்க்கையை ஒட்டிய இப்பேருண்மையை ரகுராமன் நன்கு அறிந்திருந்தான். அவனுக்குத் தன் பிரச்னை வேறு, உலகத்தவர் பிரச்னை வேறு அன்று. எங்குச் சென்று, எந்தச்

சூழ்நிலையில் வாழ்ந்திருந்தாலும் அறத்தைக் கையாளுதலும், அதை நிலைநாட்டுதலும் தன்னுடைய கடமை என்று அவன் உணர்ந்தான். துன்பப்பட்டவர்களுக்கன்றோ பிறர் துன்பம் உள்ளபடி விளங்கும்?

மனைவியை இழந்த இராமன் சுக்ரீவனது பரிதாபகரமான நிலையை முற்றும் உணர்ந்தான். அவனுக்குத் துணைபுரிய வாக்குக் கொடுத்தான். வாலியின் வரலாற்றையும் வல்லமையையும் முற்றும் கேட்டு அவன் அறிந்து கொண்டான். "அவனை நான் ஒழித்து, உன் மனைவியை மீட்டெடுத்து உன்னிடம் ஒப்புவிக்கிறேன். அதுமட்டுமல்ல, கிஷ்கிந்தா ராஜ்யமும் உனக்குரியதாகப் போகிறது" என்று இராமன் உறுதி கூறினான். தனது துயரம் ஒருபுறம் மனதை வாட்டிக் கொண்டிருந்தும் இப்பொழுது சுக்ரீவனுடைய துயரமே இராமனுடைய துயரம் ஆய்விட்டது. ஆகையால் அதை அகற்றிவைப்பதற்கான உபாயங்களிலே முழு மனதோடு அவன் ஈடுபட்டான்.

### சுக்ரீவன் அடைந்த அவமானம்

என்ன போக்கில் போர் தொடுப்பது என்பதைப் புதிய நண்பர்கள் தீர்மானம் செய்து விட்டார்கள். சுக்ரீவன் வலியச் சென்று வாலியைச் சண்டைக்கு இழுக்கவேண்டும்; அண்ணனுக்கும் தம்பிக்குமிடையில் மற்போர் நிகழ்ந்து கொண்டிருக்கையில் இராமன் தன்னுடைய இலக்கு மாறாத பாணத்தைப் பிரயோகித்து, வானர ராஜனை சம்ஹாரம் செய்து விடுவதாக ஏற்பாடு. அதன்படி சுக்ரீவன் கிஷ்கிந்தை நகருக்குள் துணிந்து சென்றான்; கர்ஜித்தான். "வஞ்சகனாகிய நீ, வாடா வெளியே!" என்று வாலியை அறைகூவி அழைத்தான். வாலியும் வீராவேசத்துடன் வெளியில் வந்தான். மூண்டது போர்; ஒருவனை ஒருவன் அடித்தான், குத்தினான்,

புடைத்தான்; சுழன்று சுழன்று வந்தார்கள்; கரணங்கள் பல போட்டார்கள். நேரம் செல்லச் செல்ல சுக்ரீவனுடைய வலிவு குறைந்தது. மூத்தவன் அவனைச் சாங்கப் புடைத்தான். அப்போக்கிலேயே சென்றால் இன்னும் சிறிது நேரத்தில் சுக்ரீவனுக்கு உயிர் போய்விடும். ஆனால் நிலைமை அவ்வளவு மோசமாகப் போவதற்கு முன்பே அவன் ஓட்டம் பிடித்தான். ருச்சியமூகமலைக்கு ஓடி நிற்பதைத் தவிரவேறு வழியில்லை என்று விரைந்து ஓடினன். அப்படி ஓடியவனை எதிர்த்து நின்றான் இராமன். இராமனைப் பார்த்ததும் அவன் முறையிட ஆரம்பித்தான்: "இதற்காகவோ என்னோடு நீ நட்புக் கொண்டாய்? எனக்குத் துணைபுரிய உறுதிமொழி கூறினாய்? உன்னை நம்பி வம்புச் சண்டைக்குச் சென்ற என் கதி எப்படி ஆய்விட்டது பார். நம்பினவரைக் கைவிடுவது தானா உனக்குத் தர்மம்? ராமா, இப்படியும்என்னை நீ அம்பலத்தில் விட்டு விடலாமா?"

"நண்பா, கிணறு வெட்டப்பூதம் புறப்பட்டதுபோன்று ஆய்விடலாகாது என் செயல். உனக்கு நான் அபயம் அளித்தாய் விட்டது. உனக்கு இனி யாரிடத்திருந்தும் அழிவில்லை. ஆனால் என் கையாலேயே நீ அழிந்துபோனால் அதைவிடப் பெரிய கேடு ஒன்றை நான் செய்தவன் ஆவேன். நீயும் உன் அண்ணனும் போர்புரிகையில் மூத்தவன் யார், இளையவன் யார் என்பது எனக்கு விளங்கவில்லை. ஒரே அச்சில் வார்த்த இருவர் போன்று நீங்கள் தென்பட்டீர்கள். வாலியை மாய்ப்பதற்குப் பதிலாக உன் மீது என் பாணம் பாய்ந்து விடுமானால் பிறகு என் கதி என்ன ஆவது? ஆகவே திரும்பவும் நீ போர் புரிந்தாக வேண்டும். இதோ இந்த வனமாலையை உன் கழுத்தில் சூட்டுகின்றேன். அணிந்திருக்கும் மாலையைக்கொண்டு உன்னை நான் அடையாளம்

தெரிந்துகொள்ள முடியும்; இம்மாலை அணியாத மற்றவனை இலக்குத் தவறாத என் அம்பு பாய்ந்து கொல்லும். சிறிது நேரத்தில் நீ அதைக் காண்பாய்; போ திரும்பவும் போருக்கு" என்று ரகுராமன் அவனை உற்சாகப்படுத்தினான். சுக்ரீவனும் அதற்கு இசைந்தான். ஆயாசத்தை அவன் அகற்றிக்கொண்டான்; புதிய ஊக்கமும் நம்பிக்கையும் பெற்றவனாக நுழைந்தான் கிஷ்கிந்தைக்குள். முன்பு அவன் ஆரவாரித்ததைவிட அதிகமாக இப்பொழுது கர்ஜித்தான். இவன் மற்போர் வேண்டி வந்ததை வாலியும் உணர்ந்தான். "இப்பொழுது அவனை அடியோடு அதம் செய்துவிடுகிறேன்". என்று சபதம் கூறிக்கொண்டு அரண்மனைக்கு வெளியே வந்து சேர்ந்தான் வாலி. இரண்டாவது யுத்தம் துவங்கியது. பழையபடி அடித்தல், குத்துதல், தூக்கி வீசுதல் முதலியன நிகழ்ந்துகொண்டிருந்தன. இளையவன் கழுத்தில் வனத்தில் அலர்ந்த பூமாலை; மூத்தவன் கழுத்திலோ பிரகாசித்துக்கொண்டிருந்த மெல்லிய பொற்சங்கிலி. வாலியின் மார்பில் திடீரென்று அம்பு ஒன்று பாய்ந்து துளைத்தது. பதைத்துத் துடித்துக் கீழே விழுந்தான் அவன்.

வாலி: இந்தப் பாணப் பிரயோகம் செய்தவன் யாராயிருக்கலாம்? யார் ஆனாலும் அவன் ஒரு மஹா வீரனே! அவன் எங்கிருக்கிறான்? உயிர் துறப்பதற்கு முன்பு ஒரு தடவையாவது நான் அவனைக் காண விரும்புகிறேன்.

கோதண்டராமனும் அவனைப் பின் தொடர்ந்து தம்பியும் மெதுவாக வாலியின் எதிரில் வந்து சாந்தமே வடிவெடுத்தவர்களாக நிற்கின்றனர்.

வாலி: மரண வேதனையிலிருக்கும் எனக்குக் கண் குளிரக் காட்சி கொடுக்கும் நீங்கள் இருவரும் யார்? எந்த

லோகத்தைச் சேர்ந்தவர்கள்? நர வடிவெடுத்திருக்கும் தேவர் போன்று நீங்கள் தென்படுகிறீர்கள்.

**இராமன்:** நாங்கள் இருவரும் அயோத்தி மன்னர் தசரதன் குமாரர்கள். மறுமுறை அம்பு எய்வதற்கு அவசியமில்லாது ஒரே பாணத்தால் உன் உயிரை வாங்கத் தீர்மானித்தவன் நானே.

**வாலி:** ஓகோ! நெறி தவறாத நேர்மையுடைய தசரத மஹாராஜாவின் திருமகன் நீ தானே? புகழுக்கு உரியவன் என்று உன்னையா உலகம் போற்றுகிறது? நூல்களின் நுட்பங்களை எல்லாம் முற்றும் அறிந்தவன் என்று சொல்லப்படுபவன் நீதானா? நீ நற்குடியில் பிறந்தவன் அல்லவா? நீ பலமும் வீரியமும் மிகுந்திருக்கப் பெற்றவன்; மஹா தேஜஸ்வி; நல்ல விரதங்கள் பலவற்றைக் கையாண்டவன். மிக நன்று! உன் பெருமையை உன் செயலே காட்டுகிறது!

நான் உன்னை எதிர்க்காமலும், பகைக்காமலும், மற்றொருவனோடு போர்புரியும் நெருக்கடியில் என் மார்பில் பாணத்தை நாட்டி அடித்தனையே! இது தானோ நீ புகழைப் பெறுதற்கு உற்ற உபாயம்?

**இராமன்:** உன்னால் காப்பாற்றப்படும் நிலையில் இருக்கிறான் உன் தம்பி. பலாத்காரமாக நீ அவனிடத்தில் ஒழுக்கம் தவறி நடந்தாய். அத்தகைய பாதகனாகிய நீ, என் செயலில் குற்றம் கண்டு பிடிக்க முயலுகின்றாய். குற்றமுடைய ஒருவன் பிறர்மீது குற்றம் கண்டு பிடிக்கத் தகுதியற்றவன்.

**வாலி:** இராமன் இரக்கமுள்ளவன்; உயிர்களுக்கு நன்மை செய்வதில் ஊக்கமுடையவன்; அவசரப்பட்டு ஒன்றை

யும் செய்து விடமாட்டான்; பெரியோர்களுடைய பெரு நெறிகளை நன்கு அறிந்தவன் என்று கேள்விப்பட்டிருந் தேன். ஆனால் உன்னை நேரில் பார்த்த பின்பு உனது உண்மையான இயல்பு எனக்கு நன்றாக விளங்கு கிறது! நீ வஞ்சகன், அக்கிரமசாலி, புல் மூடிய கிணறு போன்றவன்.

**இராமன் :** பாபம் என்னும் கசுமலங்களை எரித்துச் சாம்ப லாக்கும் தீயைப் போன்றவன் நான். கெட்ட ஒழுக்க முடையவர் என் பாணத்தினின்றும் தப்பித்துக்கொள்ள முடியாது.

**வாலி :** உன் தேசத்திலாவது உன் பட்டணத்திலாவது நான் எள்ளளவும் கேடு செய்யவில்லை. உன்னை நான் எவ்விதத்திலும் அவமானப்படுத்தியதில்லை. அறத் துக்கு உறைவிடம் என்றே உன்னைப் பாராட்டி வந்துள்ளேன். ஆயினும் நீ என்மீது வம்புச் சண்டைக்கு வந்த காரணம் யாது?

**இராமன் :** தன் நாடு, பிறர் நாடு என்னும் வேற்றுமை தர்ம சிந்தனை உள்ளவர்களுக்குக் கிடையாது. குற்ற மானது எவ்வுலகில், யாரிடத்தில் இருப்பினும் அவனை வலிய எதிர்த்துத் தண்டிப்பது என் கடமை. நீயோ தர்மத்தை அழித்துக் கொண்டிருப்பவன்; நிந்தைக்கு இடமானவன்; உனக்குக் காமச் செயல்களே முக்கிய மானவைகள்.

**வாலி :** காய்களையும், கனிகளையும், கிழங்குகளையும் தின்று கொண்டு, காட்டில் திரியும் தன்மையுள்ள கேவலம் குரங்கு இனத்தவர்களாகிய எங்களுக்குப் பாபச்செயல்

என்றும் புண்ணியச் செயலென்றும் என்ன வித்தியாசம் இருக்கிறது?

இராமன்: நீங்கள் வெறும் விலங்குகள் என்றால் உங்களை விரும்பியவாறு வேட்டையாடும் உரிமை அரசர்களுக் குண்டு. வேட்டையாடுவதில் முன்னெச்சரிக்கையென்பது கிடையாது. குரங்குகளுக்குப் பாப புண்ணியம் என் பன இல்லை என்றால், நீ வடிவத்தில் வானரம்; மன அமைப்பிலும், கற்ற கல்வியிலும், பெற்ற பயிற்சியிலும் அறிவுடைய மானுடருக்கு ஒப்பானவன். விவேக முடைய ஒருவன் வடிவத்தில் வானரமாயிருந்தாலும் தன்மையிலே மேலோன் ஆகிறான். வாலி! நீ தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் ஆகிய புருஷார்த்தங்களை நன்கு அறிந்தவன். ஆதலால், அந்த நல்லறிவுக்கு ஏற்ப ஒழுக நீ கடமைப்பட்டிருக்கிறாய்.

வாலி: ராமா, நீ மனிதர்களுக்கெல்லாம் மன்னனாய் இருக் கிறாய். பூமி, பொன், வெள்ளி ஆகிய இம் மூன்றும் யுத்தத்துக்குக் காரணமாயிருப்பவைகள். அவைகளிலா வது அல்லது இவ்வனத்திலுள்ள கனி, கிழங்கு முதலிய வைகளிலாவது உனக்குப் பேராசை ஏதேனும் உண்டாயிருக்கிறதா?

இதுவரையில் மௌனமுற்றிருந்த இலக்ஷ்மணன் இப் பொழுது வாலியை நோக்கி, "வானர வேந்தா, நீ விஷயம் தெரியாது பிதற்றுகின்றனை. தந்தையைச் சத்திய சங்கற்பன் ஆக்குதற் பொருட்டு இன்பம் அனைத்துக்கும் இருப்பிட மாகிய அயோத்தியைத் துறந்துவிட்டு, துன்பத்தைப் பொருட்படுத்தாது காட்டுக்குக் கடிதில் ஏகிய கோமகனை நீ பேராசைக்காரன் என்கிறாய்" என்று பகர்ந்தான்.

வாலி: ராமா, நீ க்ஷத்திரியன். தர்மம் தவருதவன்; புகழுக்குரியவன். நீ தவ வேடம் தரித்திருக்கிருய். தவசிகள் அஹிம்சா தர்மத்தில் நிலைபெற்றவர்கள். எவ்வுயிர்க்கும் அன்பாயிருப்பது அவர்கள் அனுஷ்டிக்கும் விரதமாகும். நீ பூண்டிருப்பதோ தவ வேடம்; புரிவதோ கொலைத்தொழில். உன்னுடைய வேஷத்துக்கும் செயலுக்கும் பொருத்தமில்லை. இத்தகைய நயவஞ்சகத்தை ஏன் வைத்திருக்கிருய்?

இராமன்: தனக்கென வாழாது பிறர் நன்மையின் பொருட்டு வாழ்பவனே தபஸ்வி. நான் தவ வேடம் பூண்டிருப்பது, கல்போன்று செயலற்றுச் சும்மா இருப்பதற்காக அன்று. கோதண்டமே என் ஜபமாலை; உன்போன்ற கொடியவர்களை அழிப்பதே நான் செய்யும் ஜபம். நான் வனவாசத்தை ஏற்றுக் கொண்டிருப்பது இதன் பொருட்டே. தவம் புரிகிறவர்கள் ஒன்றுக்கும் உதவாதவர்கள், அவர்களால் ஆபத்து எதுவும் நேராது என்று உன் போன்ற கொடியவர்கள் கருதுகின்றனர். அத்தகைய கருத்துக்கு ஏற்ப கொடிய செயலிலும் அவர்கள் ஈடுபடுகின்றனர். அத்தகைய தகவிலர்களைத் தக்கவாறு தண்டிப்பதையே தர்மமாகக் கொண்டிருக்கிறேன்.

வாலி: மாயமாக மறைந்து போன உன் மனைவியை மீண்டும் பெறுவதற்காகத்தானே நீ சுக்ரீவனேடு சிநேகம் பூண்டிருக்கிருய்?

இராமன்: ஆம், சுக்ரீவன் எப்படியாவது சீதையைத் தேடிக் கண்டுபிடிப்பதாக வாக்குக் கொடுத்திருக்கிருன். நானும் அவனுடைய குறைகளை நீக்கி வைப்பதாக இசைந்துள்ளேன். எக்காரணத்தை முன்னிட்டும்

நட்புப் பிரியலாகாதென்று நாங்கள் இருவரும் அக்னி சாட்சியாக உடன்படிக்கை செய்திருக்கிறோம்.

**வாலி:** ராமா, ராஜ தந்திரத்தில் உன் அறிவு மிகக் குறைந்தது என்பது இப்பொழுது எனக்கு நன்கு விளங்குகிறது. பெண்டாட்டியைப் பறிகொடுத்தது முதல் உன் அறிவையும் நீ பறிகொடுத்துவிட்டாய் போலத் தோன்றுகிறது. சகல அங்கங்களோடும் ஆதிக்கத்தோடும் கூடிய அரசன் ஒருவனுடைய சகாயத்தை நாடுவதற்குப் பதிலாக அனுதையாகத் திரிகின்ற ஒருவனுக்கு நீ ராஜ்யம் தேடிக் கொடுக்கப் போகின்றாய். உன் மூலம் இனி அவன் பெறப்போகிற ஆதிக்கத்தைக்கொண்டு உனக்கு அவன் உதவிபுரியப் போகிறான். கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்து, அது உருகிக் கண்ணை மூடிக்கொண்ட பிறகு, கொக்கைப் பிடிக்கின்ற தந்திரம் எவ்வளவு பரிகாசத்துக்குரியதோ, அவ்வளவு பரிகாசத்துக்குரியது உன்னுடைய ராஜ தந்திரம்.

**இராமன்:** அக்கிரமசாலியின் உதவியை நாடுவது அக்கிரமத்தின் உதவியை நாடுவதற்கு ஒப்பாகும். தீய உபாயத்தைக்கொண்டு நல்லதை நிலைநாட்ட முடியாது. உன் சகாயத்தை நாடுவது அதர்மத்தின் சகாயத்தை நாடுவதற்கு ஒப்பாகும். அத்தகைய உதவி எவ்வளவு பெரியதாயிருப்பினும், அல்லது எவ்வளவு எளிதில் அகப்படக் கூடியதாயிருப்பினும் நான் அதைக் கனவிலும் நாடேன். சுக்ரீவன் மூலம் உதவியைப் பெறுவது எவ்வளவு சிரம சாத்தியமானதெனினும் அது தர்மத்துக்கு உடன்பட்ட உபாயம். ஆதலால் நான் அதையே நாடுவேன். எவ்வளவு கஷ்டமானதாயிருப்பினும்,

எவ்வளவு துன்பத்தைத் தருவதாயிருப்பினும் நான் தர்மத்தையே கடைப்பிடிப்பேன்.

வாலி: உன் பத்தினியைப் பறிமுதல் செய்தவன் யார் என்று உனக்குத் தெரியுமா?

இராமன்: இலங்கேசனாகிய இராவணன் அவளை ஆகாய மார்க்கத்தில் தூக்கிக்கொண்டு போய்விட்டதாக காலஞ்சென்ற ஜடாயுவிடமிருந்து நான் கேள்விப் பட்டேன்.

வாலி: ராமா, நீ அசட்டுத்தனமாக நடந்துகொண்டாய் என்பதற்குச் சான்று வேறு ஒன்றும் வேண்டியதில்லை. எந்த இராவணனால் நீ இப்பொழுது துன்பத்திலிருக் கிறாயோ, அந்த இராவணனை நான் ஒரு பூச்சியாக வாலில் கட்டி விளையாடினவன். நான் ஆணையிட்ட மாத்திரத்தில் அவன் என்னிடம் கதறிக்கொண்டு ஓடி வருவான். நீ என்னிடத்தில் ஒரு வார்த்தை சொல்லி, உட்கார்ந்தபடியே காரியத்தைச் சாதித்துக்கொள்வதற் குப் பதிலாக விண்ணுலகுக்கு நூல் ஏணி வைப்பது போன்று திண்டாடுகிறாய்.

இராமன்: ஒருவன் மறைந்திருந்து தந்திரமாகத் திருடுகிறான் என்று வைத்துக்கொள். மற்றொருவன் பகிரங்கமாகப் பிறர் பொருளைச் சூறையாடுகிறான் என்றும் வைத்துக் கொள். இவ்விருவருள் பெருங் குற்றவாளி எவன்? சமூகத்துக்குப் பெருங்கேடு எவனிடமிருந்து அதிகமாக உண்டாகிறது?

வாலி: வெட்டவெளியாகக் கொள்ளையடிப்பவனே பரம துஷ்டன். சமூக வாழ்க்கைக்கு அத்தகையவன் சத்

துரு ஆவான். பெரும் தண்டனைக்குத் தகுதியுடைய வனும் அவனே.

இராமன்: பிறர் மனைவியை வஞ்சகமாக அபகரிப்பவன் மஹா பாவி என்றும், அவன் மரணதண்டனைக்கு உரியவன் என்றும் கருதப்படுகிறான். நீயும் இராவணனும் பிறர் மனைவிகளை அபகரிப்பதில் வீரர்கள். அவன் பயங்காளி போன்று ஒளிந்திருந்து, பொய்வேடம் பூண்டுவந்து, வஞ்சகமாகச் சீதையைத் தூக்கிக்கொண்டு போனான். அது இரண்டாந்தரமான குற்றம் என்று நீ இப்பொழுது தான் ஒத்துக்கொண்டாய். அத்தகைய இரண்டாந்தர மான குற்றத்துக்கே மரண தண்டனை பொருந்துமென் றால், உன்னுடைய முதல்தரமான குற்றத்துக்கு அது ஏன் பொருந்ாது? சமூக நலத்தின் பொருட்டு உங்கள் இருவரையும் மாய்த்துவிட நான் தீர்மானித்திருக்கை யில், நான் உன்னுடைய உதவியை நாடுதல் எதற்காக?

வாலி: என்னைக் கொல்லவேண்டியது தகும் என்று தோன்றினாலும், நீ முன் எச்சரிக்கை செய்யாது என்னைக் கொல்வது முறையா?

இராமன்: வாலி, உன் நெஞ்சில் கையை வைத்து எண்ணிப் பார். முன் எச்சரிக்கை உனக்கு ஒரு பொழுதும் வர வில்லை என்று இப்பொழுது வருந்துவது பிசகு. நானே உனக்கு நேரில் வந்து எச்சரிக்கை செய்யவேண்டிய அவசியமில்லை. தெய்வத்திடமிருந்து நமக்கு வருகிற போதனை எத்தனையோ உபாயங்களில் ஓயாது வந்து கொண்டிருக்கிறது. தெய்வத்தின் அருள் கணப் பொழுதாவது நமக்குப் புறம்பாவதில்லை. வீண் கர்வத் தாலும் ஆணவத்தாலும் பீடிக்கப்பட்டுள்ள ஒருவன்,

அத் திவ்விய போதனையை உணர்வதுமில்லை; அங்கீ கரிப்பதுமில்லை. உன்னுடைய செருக்கு உனக்குச் சத் துருவாக வந்து நின்றது.

வாலி சற்று சிந்தித்துப் பார்த்தான். "உண்மை, முற் றிலும் உண்மை.......... என் மனைவி தாரா அப்பொழுதே தடுத்தாள். மொத்துண்டு ஓடிய சுக்ரீவன் அவ்வளவு விரை வில் திரும்பி வந்ததில் ஏதோ மர்மம் இருக்கிறது என்றாள் என் மனைவி. பின் உதவியில்லாது ஒருவன் அப்படி வரத் துணியான் என்றும் சொன்னாள். மதியிழந்து நான் அதை ஏற்க மறுத்துவிட்டேன்" என்று அவன் தனக்குத் தானே சொல்லிக்கொண்டான். தன் குற்றத்தையும் அவன் ஒரு வாறு உணர்ந்தான். மேலும் இராமனைப் பார்த்து, "ராமா, நீ க்ஷத்திரிய வீரனாயிற்றே; மறைந்திருந்து கபடமாகக் கணை தொடுத்து சத்துரு அல்லாத ஒருவனை விலா வெடிக்க அடிப் பது கோமகனாகிய உனக்குத் தகுமோ? ஏன் நீ என்னை நேரில் எதிர்த்துக் கொல்லத் துணியவில்லை?" என்றான்.

இராமன்: உன்னை எதிர்த்துப் போர் புரிபவனுடைய பலத் தில் பாதி உனக்கு வந்துவிடவேண்டுமென்ற வரத்தை நீ பெற்றிருக்கிறாய் அல்லவா? அதன் அறிகுறியாக உன் கழுத்தில் தங்கச்சங்கிலியும் திகழ்கிறது. உன்னை எதிர்த்தவர்கள் எல்லாம் பாதி பலத்தை இழந்து, உனக்கு அடிமைப்பட்டு விடுகிறார்கள் என்ற கர்வத் தால்தான் நீ யாருக்கும் அடிபணியாதிருந்தாய். ஒரு வரத்தைப் பெற்ற ஒருவன் கர்வமடையும்போது அல் லது வரத்தை முறைதவறிக் கையாளும்போது அவ் வரமே அழிந்துபட்டுப் போகிறது. நீ பெற்ற வரத்தை ஏதேனும் ஒருவிதத்தில் இழந்தாக வேண்டும். அதை உன்னிடமிருந்து கறந்தெடுப்பதற்கு இதைத் தவிர

வேறு உபாயமில்லை. மேலும், சிறிது நேரத்துக்கு முன்பு ராஜதந்திரத்தைப்பற்றிப் பேசினாய் அல்லவா? தன் பலத்தில் பேர்பாதியை எதிரிக்குக் கொடுத்து விடுவது ராஜதந்திரம் தெரிந்தவர்களது செயலாகுமா? நான் கொண்டிருந்த நோக்கம் உன்னை மாய்ப்பதே ஒழிய உனக்கு என் பலத்தில் பாதியைக் கொடுப்ப தல்ல. ஆகையால்தான் நான் மறைமுகமாக நின்று இரண்டாவது பாணத்துக்கு அவசியமின்றி, ஒரே பாணத்தால் உன்னை இந்த நிலைக்குக் கொண்டுவந்துள்ளேன். இவ்வுடலில் நீ இனி இருக்கமுடியாது.

இதைக்கேட்டதும் வாலி மூர்ச்சை அடைந்துவிட்டான். சிறிது நேரத்துக்குப் பிறகு மூர்ச்சை தெளிந்தான்; மேலும் அவன் மொழிவானுயினன்: "ஆ! எனக்கு அந்திய காலம் அணுகிவிட்டது. என் மனத்தினின்று திரை ஒன்று இப்பொழுது நீக்கப்பட்டிருக்கிறது. நான் செய்த குற்றங்களை நன்கு உணர்கிறேன். அக்குற்றங்களுக்கு விமோசனம் தேடிக்கொள்ளுதற்கும் சிறிது அவகாசம் இருக்கிறது. தம்பீ, சுக்ரீவா! என் அருகில் வா, என் பிழையைப் பொறுப்பாயாக. நான் உனக்குச் செய்த அபராதம் மிகப் பெரியது."

**சுக்ரீவன்:** அண்ணு, நீ ஓயாது குற்றமே செய்துகொண்டிருப்பினும் நான் அவைகளை எல்லாம் மகிழ்வுடன் சகித்துக்கொண்டிருப்பதற்குப் பதிலாக உன்னைக் கொல்ல வந்த எமன் போன்று இங்கு நிற்கிறேன். சகோதர வாஞ்சையற்ற மஹாபாவி என்று உலகம் என்னை நிந்திக்குமே! நீ என்னை மன்னித்தருள். உன்னுடைய ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொண்டு நான் இந்தக் கிஷ்கிந்தையை விட்டு அப்பால் ஓடி மறைந்து

விடுகிறேன். நீ அங்கதனுக்குப் பட்டாபிஷேகம் செய்துவிட்டுப் பரலோகப் பிராப்தி அடைவாயாக.

வாலி: சுக்ரீவா, அது சரியன்று. விதிவசத்தால் நாம் இருவரும் சகோதர வாஞ்சையுடன் கூடியிருந்து ராஜ்யத்தை அனுபவிக்கும் பாக்கியத்தைப் பெறவில்லை. உன்னைத் துன்புறுத்தியதற்குத் தக்க தண்டனை எனக்குக்கிடைத்தது. அத்தண்டனையை நான் இப்பொழுது மனமார ஏற்றுக்கொள்கிறேன். நீ ராஜ்யத்தை ஏற்றுக்கொள். அன்புக்குரிய எனது இளங்குமரன் அங்கதனை நீ நன்கு கவனித்துக்கொள். என் மனைவி தாரா உனக்கு நல்ல புத்தியைத் தக்க சமயங்களில் புகட்டுவாள். புதிய காரியம் எதிலும் பிரவேசிக்குமுன் அவளுடன் கலந்து ஆலோசனை பண்ணு. 'தையல் சொல் கேளேல்' என்னும் விதிக்கு அவள் விஷயம் விலக்கு ஆகும். இதுவரையில் அவள் எனக்குப் புகட்டிய புத்தியில் எதுவும் பொய் போகவில்லை. ஆக, அவளுடைய அபிப்பிராயத்தை ஏற்பதால் உனக்கு நன்மையே விளையும்.

பிறகு, வாலி களைப்பால் சிறிது கண்மூடிச் சும்மாயிருந்தான். கண் விழித்ததும் இராமனைப் பார்த்து, "ராமா, நீ கருணைக் கடல். மரணத்தின் தத்துவத்தை நான் இப்பொழுது நன்கு உணர்கிறேன். பயங்கொள்ளிகளே மரணத்தை அமங்கலமானது என்பார்கள். தீயானது இரும்பைக் காய்ச்சிச் சுத்தம் செய்வது போன்று மரணம் மனிதனைத் தூயவனாக்குகிறது. என்னுடைய ஆணவத்தை அடித்து விரட்டியது நீ அனுப்பிய மரணம்; எனது அக்ஞான இருளும் அதனாலேயே விலகிற்று. என்னுடைய பாபச் செயல்களெல்லாம் உன்னுடைய தர்ம வில்லால்

அடித்து அகற்றப்பட்டன. உன்னுடைய கிருபையை நான் என்னென்று சொல்வேன்? தீங்கு செய்வதுபோன்று வெளிக்குக் காட்டி, நன்மையே செய்யும் உதாரகுணம் உன்னுடைய பூஷணம் அன்றோ? நீ என்னை வலிய வந்து ஆட்கொண்டாய்."

இதைக் கேட்ட சுக்ரீவனுக்கு அடங்காத் துயரம் வந்துவிட்டது. அவன் பகர்ந்ததாவது:—

"அண்ணா, இனி நான் வாழ்ந்திருப்பதைக் காட்டிலும் பிராயோபவேசம் செய்துகொள்வது நலம் என்று தோன்றுகிறது. நான் பட்டினி கிடந்து சாகப்போகிறேன்."

வாலி: இளையோய்! அது தகாது. ராம காரியத்தை நிறைவேற்றி வைக்கும் தனிப் பொறுப்பும் பெருமையும் உன்னுடையவை. நமது கிஷ்கிந்தை ராஜ்யம் அனைத்தும் ராம சேவையின் பொருட்டு இருக்கட்டும். அறப்பணி புரிவோரும் இறைவன் பணி புரிவோரும் ஒரு நாளும் கேடு அடைவதில்லை. இறைவன் பணி புரிந்து நீயும் கிஷ்கிந்தையும் நீடூழி வாழ்ந்திருப்பீர்களாக. இதோ, நான் உடலை உகுக்கப் போகிறேன். அதற்கு முன்பே நான் அணிந்திருக்கும் சொர்ணச் சங்கிலியை நீ எடுத்து அணிந்துகொள். அப்படிச் செய்யாவிட்டால், அது பிரேதத்தின் மீதிருப்பதனால் அதன் மகிமையும் வலியும் அழிந்துபோம். நீ அதை அணிந்துகொண்டிருக்குமளவும் உன்னை யாரும் எதிர்த்து நின்று வெல்ல முடியாது. ராம காரியத்தின் பொருட்டு அவ்வல்லமையை நீ பயன்படுத்திக்கொள். சுயநலத்துக்காக அதைப் பயன்படுத்திய தோஷம் என்னுடையது. ராம சேவைக்காக அதைப் பயன்படுத்திய பெருமை உன்னுடையதாயிருக்கட்டும்.

இப்பொழுது இராமன் அன்பே வடிவெடுத்தவனாய் வாலியைக் கூர்ந்து பார்த்தான். கண்ணுக்குத் தென்படாது பனிநீர் மலரின்மீது படிந்து அதற்கு எழில் தருவது போன்று இராமனது கருணை நிறைந்த பார்வை வாலியின் உள்ளத்தில் பரமானந்தத்தை ஊட்டிற்று.

ஏவுகூர் வாளியால் எய்து, நாய் அடியனேன்
ஆவிபோம் வேலைவாய், அறிவுதந் தருளினாய்;
மூவர் நீ; முதல்வன் நீ; முற்றும் நீ; மற்றும் நீ;
பாவம் நீ; தருமம் நீ; பகையும் நீ; உறவும் நீ!

"ராம, ராம, ஜெய ஜெய ராம, நின் கருணையால் உன் சான்னித்தியத்தையே உலகெங்கும் நான் காண்கிறேன். உலகனைத்துக்கும் மூலப்பொருள் நீ; சொல்லில் அடங்காச் சுகம் ஒன்று என்னை எதிர்கொண்டழைக்கிறது. ராம ராம ஜெய ஜெய ராம!" என்று பகர்ந்துகொண்டே பஞ்ச பூத உடலைத் துடைத்துவிட்டு, வாலி பாரமார்த்திகப் பெருநிலை அடைந்துவிட்டான்.

---

# ராம ராவண யுத்தம்

நூலின் சிறப்பு

இராமனுய் வந்துதோன்றி யிராவணன் தன்னைவீட்டித்
தராதல முழுதுங்காத்துத் தம்பியுந் தானுமாகப்
பராபரமாகி நின்ற பண்பினைப் பகருவார்கள்
நராபதியாகிப் பின்னும் நமனையும் வெல்லுவாரே.

*இராமாயணம் என்னும் இதிகாசத்தில் பல கலைஞானங்கள் பொதிந்து கிடக்கின்றன. அதுமட்டுமல்ல; ஆத்ம ஞானத்துக்கும் அதில் இடமுண்டு. ஆகையாலேதான் கவிஞர் தங்களது கற்பனு சக்தியைவேண்டியவாறு வளர்ப்பதற்கு இந்நூல் இடந் தருகிறது. இயற்கையின் வனப்பைக் காணுதலைக் குறியாக வைத்துக்கொண்டு இந்நூலைப் படிக்கலாம். விதவிதமான சமூக அமைப்புகளைக் காண்பதற்கு இதனிடத்துச் செல்லலாம். அரசாங்கங்கள் எத்தனை வகைப்பட்டவைகளாக இருக்கக்கூடும் என்பதையும் இது காட்டுகிறது. ஒவ்வொரு மனிதனது தரத்தையும் மதிப்பிடுவது ஒருவிதமான ஆராய்ச்சியாகும். தரத்துக்கும் தரக்கேட்டுக்கும் ஓர் அளவில்லை. இராமாயணத்தில் அமைந்துள்ள பாத்திரங்கள் விதவிதமான தரங்களுக்கு இருப்பிடங்கள் ஆகின்றன. ஆங்கிலத்தில்* (Sex Psychology) *செக்ஸ் சைகாலஜி என்னும் புதிய கலைஞானம் ஒன்று வளர்ந்து வருகிறது. அது ஆண்பால், பெண்பாலைப் பற்றிய தத்துவ ஆராய்ச்சியாம். அத்தகைய தத்துவ ஆராய்ச்சிக்கும் இந்நூல் வேண்டிய அளவு இடம் கொடுக்கிறது. இராணுவக் கலை ஒவ்வொரு நாட்டிலும் இருக்கிறது. அக்கலையின் அடிப்படைத் தத்துவங்கள் யாவர்க்கும் பொதுவாய் உள. இராணுவக் கலைஞானத்தை இராமாயணத்தினின்று ஏராளமாக*

8-3

எடுக்கலாம். கலைக் களஞ்சியம் என்று இந்நூலை அழைப்பது மிகையாகாது.

## போருக்கு ஆயத்தம்

வாலியைக் கொல்ல இராமன் கையாண்ட முறை ஒன்று; இராவணனைக் கொல்ல அவன் கையாண்ட முறை அதினின்று முற்றிலும் மாறுபட்ட வேறு ஒன்று. இராவணனிடம் இராமன் முதலில் தூது அனுப்புகிறான். போர் மூண்டுவிட்டால் விளையும் கேடுகள் எல்லாம் முற்கூட்டியே இலங்கை வேந்தனுக்கு விளக்கப்படுகின்றன. அவ்விளக்கம் செயலாகவும் சொல்லாகவும் வடிவெடுக்கிறது. ஆக்குவது அரிது, அழிப்பது எளிது என்பதை ஆஞ்சநேயன் ஒருவன் இலங்கைக்குள் நுழைந்து காட்டிவிடுகிறான். ஆயினும் இலங்கேசனுக்கு நல்லறிவு வரவில்லை. அந்தஸ்தில் அவன் மிக உயர்ந்தவன். அதை யாரும் மறுக்க முடியாது.

பின்பு, குரங்கு ஒன்றோ அரச சபைக்குரிய ஜந்து அல்ல. வேடிக்கை, விளையாட்டு மேடைக்கே அது உரியது. ஆனால் இலங்கை வேந்தனது கொலு மண்டபத்தில் குரங்கு ஒன்று காண்பதற்கு அரிய காட்சியை உண்டுபண்ணி விடுகிறது. அது செய்த அட்டகாசத்தைக் கேட்டு "கொல்லலீர் குரங்கை; நொய்தின் பற்றுதிர்; கொணர்திர்" என்று ஆக்ஞாபித்தான் இலங்கை வேந்தன். ஏவலாளர் அனுமனை உடனே கட்டிக் கொண்டுவந்தார்கள். அவன் சிறந்த ஹடயோகி. கட்டியபொழுது வாயு குமாரனாகிய அவன் உடலை மிக விரியுமாறு காற்றை உள்ளே வாங்கி அடைத்துக் கொண்டான். காற்று ஊதிய பந்தைக் கட்டுவது போன்று அவனைக் கட்டிப் பிடித்துக்கொண்டு போனார்கள். அரசன் முன்னிலையில் வைத்தவுடனே நெஞ்சத்தில் அடைத்து

வைத்திருந்த காற்றை எல்லாம் காலி பண்ணினான்; உடல் சுருங்கவே கட்டுத் தளர்ந்தது. உடனே எழுந்து நின்றான் அவ்வேற்றான். "ஆரை நீ; என்னையிங் கெய்து காரணம்? ஆருனை விடுத்தவர்? அறிய ஆணையால் சோர்விலை சொல் லுதி" என்ற அரச ஆணை பிறந்தது. பதில் சொல்லுதற்கு முன்பு தன்னுடைய அந்தஸ்தை ஆஞ்சநேயன் தானே பாது காத்துக்கொண்டான். யார்தான் இலங்கேசனுடைய சபை யில் குரங்குக்கு உட்கார ஆசனம் கொடுப்பார்கள்! ஆற்ற லும் அறிவும் படைத்தவனுக்கு வேறு யாரும் ஆதரவு தர வேண்டியதில்லை என்பதை அவன் நிரூபித்தான். நின்ற இடத்தில் வாலைச் சுழற்றினான்; சுழலச் சுழல அதை நீட்டி னான்; நீண்டு சுழன்ற வால் ஓர் ஆசனமாயிற்று. அது இலங்கேசனுடைய சிம்மாசனத்துக்கு ஓர் அடி மேலே இருந் தது. அதன்மீது அமர்ந்துகொண்டு ஆஞ்சநேயன் பதில் சொன்னான்: "இரண்டாவது அம்பு எடுப்பதற்கு அவசிய மில்லாது ஒரே அம்பில் வாலியை ஒழித்துவிட்ட சீதாராம னுடைய எண்ணிக்கையிலடங்காத ஏவலாளர்களுள் நானும் ஒருவன்" என்றான். சொன்னவன் தன் சொல் இலங்கேச னுடைய உள்ளத்தில் எத்தகைய ஸ்தானம் பெற்றது என் பதைக் கவனித்தான். அகத்தில் உள்ளதை முகம் விளக் கும் அன்றோ? வாலி என்னும் சொல் விளையாட்டுப் பருவத்தி லிருந்து இலங்கேசனுக்குத் திகிலை உண்டுபண்ணியது. அத் தகையவன் ஒரே பாணத்தால் மாயமாய் மறைந்துபோனான்! இனி, தன் கதி என்னவது? இதை அவன் வாய்விட்டுப் பேச வில்லை எனினும், முகத்தில் தவழ்ந்த மாறுதல்கள் அவ் வுணர்ச்சியை விளக்கிவிட்டன. குறிப்பறியும் தன்மையுடைய அனுமனுக்கு அது போதும். அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் ஆகிய இந்நான்கும் ஒரு வேந்தனுக்கு எஞ்சாது

இருத்தல் வேண்டுமன்றோ? அஞ்சிய ஒருவனுக்கு ஆயுதங்கள் எவ்வளவு இருந்தாலும் உதவா என்பதை ஆஞ்சநேயன் முடிவுகட்டிக்கொண்டான். கற்பினுக்கு அணியாயிருந்த சீதையைத் தான் கண்டதையும் எதிரியின் வலிவு தளர்வுற ஆரம்பித்ததையும் அவன் தன் தலைவனிடம் சென்று தெரிவித்தான்.

## பாதி வெற்றி

> தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
> போர்தாங்கும் தன்மை அறிந்து.

பேரரசன் ஒருவன் எப்பொழுதும் போருக்கு ஆயத்தமாக இருக்கவேண்டும் என்பது கோட்பாடு. அதாவது எச்சரிக்கையில்லாது எதிரி போருக்கு வந்துவிட்டாலும், தான் தயங்குகிற அல்லது தளர்வுறுகிற நிலையில் இருக்கலாகாது. இலங்கையில் எல்லாம் முதல்தரமான ஏற்பாடு. உபகரணங்கள் முற்றும் உயர்ந்தவை. 'தானை படைத்தகையால் பாடுபெறும்' என்றபடி அணிவகுப்பு எவ்வரசனுக்கும் நல்லதோர் எடுத்துக் காட்டு ஆகும். அதை இன்னும் நல்லதாக மாற்றியமைப்பதற்கு இடம் உண்டு என்று எவராலும் எடுத்துக்காட்ட முடியாது. அவ்வளவு சிறந்த பாங்கில் தற்பாதுகாப்புக்கும், பிறரைத் தாக்குதற்கும் வேண்டிய இராணுவ ஏற்பாடுகள் ராவண ராஜ்யத்தில் இருந்தன.

இராமனோ, தம்பி ஒருவனுடன் கால் நலியத் தென்திசைக்கு நடந்து வந்தவன்; வனத்தில் வாழும் விலங்கு இனத்தை உபகரணமாக எடுத்துக்கொண்டவன். ஒன்றோடு ஒன்றைச் சீர்தூக்கிப் பார்க்கில், இலங்கைச் சேனையின் வலிவு எங்கே! இராமனது வானர சேனையின் கட்டின்மை எங்கே! வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பது பழமொழி.

இனி, இராமன் இதை நிரூபித்தாகவேண்டும். அவனுக்குக் குரங்கு இனத்தைத் தவிர துணை ஒன்றும் இல்லை. அதைக் குறித்து அவன் மனம் தளரவில்லை. தான் துணிந்து சென்றது தீமையைத் தகர்த்தற் பொருட்டே என்ற உறுதியும் ஊக்கமும் அவனிடத்திருந்தன.

குரங்குகள் வந்து கூடின; மண்ணையும் கல்லையும் சுமந்தன. அல்லும் பகலும் அன்புக்காக அவைகள் உழைத்தன. கடலின்மீது அணை போடுதல்! இது ஆகக்கூடிய காரியமா? நேர்மையில் செல்பவனுக்குச் சிற்றுயிர்களின் துணையிருந்தாலும் போதும். இராமனுக்கு அறமே பெருந்துணையாகின்றது. அவன் கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவனன்றோ! ஆகவே, இது அவனுக்கு ஆகக்கூடிய காரியந்தான். கடலில் இராமன் அணை கட்டினன்; இலங்கையையும் எட்டினன். அணுக முடியாத இலங்கையை அணுகியாய் விட்டது. அச்செய்தி இலங்கேசன் காதுக்கு எட்டியது. முன்பு கொண்டிருந்த திகில் இன்னும் கொஞ்சம் அதிகப்பட்டது. ஆனால் அவன் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ளவில்லை. எப்பொழுது இலங்கை பெருநிலத்தோடு இணைக்கப்பட்டதோ அப்பொழுதே இராமனுக்குப் பாதி வெற்றி வந்துவிட்டது போன்று தென்பட்டது.

இலங்கைக்குள் நுழைதற்கு முன்பே மற்றொரு சம்பவம் இராமனுக்கு அனுகூலமாகவும் இராவணனுக்குப் பிரதிகூலமாகவும் நிகழ்ந்துவிட்டது. விபீஷணன் என்பவன் இலங்கை வேந்தனுக்கு உடன் பிறந்தவன். இளையவன் எனினும், அவன் ஒருவனே துணிந்து தமையன் சென்ற வழி நேர்மையானது அல்லவென்று விளக்கிக் காட்டினன். காம நோய் பிடித்த மூத்தவனுக்கு அவன் சொல் ஏறவில்லை. "மானுடன் வலி நீயலால் யாருளார் மதித்தார்?" என்று இராமனையும்

விபீஷணனையும் சேர்த்து இகழ்ந்துவிடுகிறான் இராவணன். அபிப்பிராய வித்தியாசத்துடன் அண்ணனிடமிருந்து பிரிந்துகொண்டு விபீஷணன் இராமனிடம் வந்து அடைக்கலம் புகுந்தான். வீடு அல்லது நாடு ஒன்று பிளவுபடுமானால், அழிந்துபட்டுப்போவதற்கு அது முன் அறிகுறியாகும். இராவணனுடைய குடும்பத்துக்குள் இந்த நெருக்கடியில் பிளவு வந்துவிட்டது. எனினும் அவன் அதை எண்ணிப் பார்க்க ஆயத்தமாயில்லை. தனது தீய எண்ணம் நிறைவேற வேண்டுமென்பதே அவனது நோக்கம்.

## போர் துவங்குகிறது

இராமனுடைய வானரசேனை அணிவகுத்து நிற்கிறது என்ற செய்தி இராவணன் காதுக்கு எட்டிற்று. அவைகளைக் காண அரசனும் தனது மாளிகையின் மேலேறினான். உயர இருந்துகொண்டு கண்ணுக்கு எட்டியவளவில் அவைகளைக் கண்டான். எதிரியின் பெரும் சேனையில் இருந்த பராக்கிரமசாலிகள் யார் யார் என்பதும் அவனுக்குத் தனது சேனைத் தலைவர்களால் விளக்கப்பட்டது.

"வரைதொறும் திரிதரும் மானின்
இனங்களும் பல என் செயும் அரியினை?"

"இந்த அற்பக் குரங்குகளுக்கும் உடன் வந்துள்ள இரண்டு மானுடர்களுக்குமா அஞ்சுவது?" என்ற மனவேகம் அவனுக்கு வந்தது. "போய் அவைகளையெல்லாம் அதம் செய்துவிட்டு வாருங்கள்" என்று ஆக்ஞாபித்தான். போர் அங்ஙனம் துவங்கியது.

இதற்கிடையில் இலங்கேசன் மற்றொரு சூழ்ச்சியையும் கையாண்டான். போர் நடைபெறும்பொழுது எதிரிகளின் மனதைக் கலக்கிவிடுவது சிறந்ததோர் இராணுவச் சூழ்ச்சி.

அது இக்காலத்தில் இருப்பது போன்று அக்காலத்திலும் இருந்து வந்திருக்கின்றது. இராமனுடைய மாயத் தலையையும் மாயச் சூடாமணியையும் அவன் உண்டுபண்ணி, சீதைக்குக் காட்டும்படி கொடுத்தனுப்பினன். இராமன் செத்தொழிந்தான் என்று கண்டவுடன் ஒருவேளை அவள் மனம் மாறி, தன்னிடம் அடைக்கலம் புகக்கூடும் என்பது அவனுடைய எண்ணம். அவைகளைக் கண்டு சீதை அழுதாள்; கலங்கினள், கதறினள். அதற்கிடையில் அது மெய்யோ அல்லது சூழ்ச்சியோ என்ற ஐயமும் அவளுடைய உள்ளத்தில் ஒரு புறம் எழுந்து கொண்டிருந்தது.

துவங்கிய போர் இராவணன் எண்ணியபடி அவ்வளவு எளியதாக வடிவெடுக்கவில்லை. சென்ற அவனது போர் வீரர் ஒருவர்பின் ஒருவராக மாய்ந்துபோக ஆரம்பித்தனர். எந்த வேளையில் நிலைமையை ஆராய்ந்து பார்த்தாலும் தனக்கு அனுகூலமான சம்பவம் ஒன்றும் வந்தமையக் கிடையாது. தாற்காலிகமாக ஒரு நிகழ்ச்சி அவனுக்கு அனுகூலமாக நேர்ந்தது. அவனுடைய வீர மைந்தனகிய இந்திரஜித் என்பவன் ராம லக்ஷ்மணர்களை நாகபாசங்களால் கட்டிவிட்டான். மன்னன் அதைக்கேட்டுப் பெருமகிழ்வுற்றான். அக்காட்சியைச் சீதைக்குக் காட்டும்படி தக்க ஏற்பாட்டை உடனே செய்தான். முன்பு மாயத் தலையைக் காட்டியதில் பொருள் ஒன்றுமில்லை. தான் பொய் பேசக்கூடியவன் என்பதை அக் காட்சியினின்று அவள் யூகிக்கக் கூடுமென்பதை அவன் நினைக்கவில்லை. மாயத்தலை கண்டது மாயம்தான்; ஆனால் இது மெய்யான காட்சி என்று அவள் உணர்ந்து பலவாறு புலம்பினள். புலம்பியவாறே அவள் திரும்பவும் அசோக வனத்தினுள் சிறைக்கு எடுத்துச் செல்லப்பட்டாள். நாகபாசத்தால் கட்டுண்டு கிடந்த இராமனும் இலக்ஷ்மணனும் கருடனுடைய சகாயத்தால் விடுவிக்கப்பட்டனர்.

இதற்கிடையில் இலங்கைப் போர்வீரர்களின் எண்ணிக்கை சிறிது சிறிதாகக் குறைந்துகொண்டே வந்தது. ஒருவர் பின் ஒருவராக எதிரிகள் தாக்குதலுக்கு இரையானார்கள். அதை எல்லாம் கண்டு கோபமுற்ற இலங்கைக் கோன் தூங்கிக்கொண்டிருந்த தம்பி கும்பகர்ணனை எழுப்பினான்; விஷயத்தை எடுத்து அவனுக்கு விளக்கினான். உற்சாகமூட்டி அவனைச் சமரின்கண் செலுத்தினான். ஆனால் அவன் முதலில் இசையவில்லை. "தையலைவிட்டு அவன் சரணந் தாழ்ந்து நின்னையுறு தம்பியோடு அளவளாவுதல் உய்திறம்"......என்று பிழைக்கும் வழியை அறிவுறுத்தினான். குற்றமுடையார் போரில் சென்று வெற்றி பெறுவது எங்ஙனம் என்று அவன் தடைசெய்தான். அதைக்கேட்ட இராவணனுக்குக் கோபம் மிக மூண்டுவிட்டது. "மானுடர் இருவரையும் கூனுடைக் குரங்கையும் கும்பிடும் தொழில் உனக்கும் உன் தம்பிக்குமே தகும்; எழுந்துபோ!" என்று இரைந்தான் அரக்க மன்னன். ஆகவே அவன் விரும்பியவாறு தூக்கத்துக்கு மன்னன் போர்க்களத்துக்குப் புறப்பட்டான். அவன் புரிந்த போர் பாராட்டத்தக்கதே. வானரங்கள் அஞ்சி ஓடின. அவைகளில் பெரும்பான்மை அடங்கி ஒழிந்தன. ஆயினும் பயன் என்? விரைவில் அவன் ராமபாணத்துக்கு இரையானான். அதைக் கேட்கவே இலங்கை வேந்தனுக்கு முதல் முதல் மனக்கிலேசம் மேலிடுவதாயிற்று. விரைவில் தன்னைத் தேற்றிக்கொண்டான். போர்க்களத்தில் ஒப்பாரி பாடுபவன் அவன் அல்லன். அதற்கடுத்தபடியாக அதிகாயன் என்ற இராவணனுடைய புதல்வன் இலக்ஷ்மணனால் அடியுண்டு மாய்ந்தான். இரண்டாந்தடவை இராவணனுக்கு விசனம் தலையெடுத்தது. இவை அனைத்திற்கும் ஈடு செய்துவிடுவதாக இந்திரஜித் தந்தைக்கு உறுதி கூறிவிட்

டுப் போருக்குப் போனன். போனவன் முக்கிய எதிரிகள் ஆகிய ராம லக்ஷ்மணர் இருவரையும் மூர்ச்சை அடையச் செய்துவிட்டான். வெற்றி வந்துவிட்டது போன்று அரக்கர் கூட்டத்துக்குத் தென்பட்டது.

ஆயினும் சிறிது நேரத்தில் இராமனும் உடன் பிறந்தவனும் மற்றுமுள்ள அனைவரும் மூர்ச்சை தெளிந்து எழுந்திருந்தனர். ஹனுமான் ஓடோடிக் கொண்டுவந்த சஞ்சீவி மூலிகை அதற்குக் காரணமாயிற்று. இந்திரஜித் திரும்பவும் இராமனை வதைக்க முன்வந்தான். வந்தவன் இப்பொழுது மற்றொரு சூழ்ச்சியைக் கையாண்டான். சீதை போன்ற மாய வடிவு ஒன்றைக் கொண்டுவந்து, ஹனுமானுடைய கண்ணெதிரே வெட்டித் துண்டாக்கினன். தாங்கள் வெல்ல முடியாது என்று அஞ்சிய அரக்கர் சீதையைத்தான் மாய்த்து விட்டார்களோ என்ற ஐயம் இராமனுடைய உள்ளத்தில் உண்டாயிற்று. எனினும், விரைவில் அம்மயக்கத்தை அவன் அகற்றிவிட்டான். போருக்கு வந்த இந்திரஜித்தை எதிர்த்துச் சென்முன் தம்பி இலக்ஷ்மணன். நடந்தது பெரும் போர். அதைக் கண்டவர்களும் திகைத்து நின்றனர். கடைசியில் இந்திரஜித் மாண்டொழிந்தான். அதைக் கேட்ட இலங்கை வேந்தனுக்குத் துன்பமும் வெறியும் சேர்ந்துவந்து விட்டன. சீதையை நசுக்கி ஒழித்துவிட்டால் என்ன என்று எண்ணினன். அவன் மனத்தகத்து ஏற்பட்ட போராட்டத்தை அவன்தான் அறிவான். ஏனென்ருல் சீதையின் பொருட்டு எதையும் பறிகொடுக்க அவன் முன்பே எண்ணி விட்டான். அது மாறுபடும் எண்ணமன்று.

### பெரும் போர்

கடைசியாக, இராவணனே போருக்குக் கிளம்பிவிட்டான். அவனைச் சூழ்ந்து அவனுடைய மிக முக்கியமான

வீரர்களும் வெளியே வர ஆரம்பித்தனர். ஒவ்வொரு நாட்டிலும் தெள்ளியெடுத்த தலை சிறந்த சேனை என்பது ஒன்று உண்டு. சிறுசிறு காரியங்களுக்கு அது வெளியில் வருவதில்லை. ஒரு பெரிய நெருக்கடியில்தான் தனது பூரண வல்லமையைக் கையாளுதற்கு அது வெளியில் தோன்றும். காமநோய்பிடித்த இலங்கை வேந்தனுக்கும் அத்தகைய நெருக்கடி இப்பொழுது வந்துவிட்டது. தேர்ந்தெடுத்த போர்வீரர்கள் முற்றுகை போடும் பெருவீரர்களைத் தனித் தனியே எதிர்த்தார்கள். கண்ட பயன் என்ன? ஒருவர்பின் ஒருவராக சுக்ரீவன் கையிலும், அங்கதன் கையிலும், அனுமான் கையிலும், நளன் கையிலும், நீலன் கையிலும், இலக்ஷ்மணன் கையிலும் அவர்கள் மரணமடைந்தனர். முடிவுதான் என்ன என்பது இனி, இராமன், இராவணன் இவர்களைப் பொறுத்ததாயிற்று. மூண்டது அவ்விருவருக்குமிடையே மூவுலகிலும் காணமுடியாத போர். ஒருவேளை வெற்றி இப் பக்கத்தில் இருப்பதுபோன்று தென்படும்; அடுத்த வேளையில் அப்பக்கத்துக்குத்தான் வெற்றி என்று யூகிக்குமுன் பழைய நிலை வந்துவிடும். ராம ராவண யுத்தத்துக்கு நிகர் ராம ராவண யுத்தமே. நாள்தோறும் இறுதியில் களைப் புற்றவனாகத் தென்படுவான் இலங்கை வேந்தன்.

பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு.

போர்க்களத்தில் கண்ணோட்டமின்றிப் பொருதலே ஆண்மை எனப்படும். ஆயின் பகைவனுக்கு ஒரு துன்பம் நேர்ந்த பொழுது அதனை நீக்குதற்குக் கண்ணோட்டம் காட்டுவதே அவ்வாண்மைக்குச் சிறப்பாகும். ஆதலின் இராவணனை நோக்கி "இன்றுபோய் நாளைவா" என்று கூறி விடுவிப்பான் கோசலை நாடுடை வள்ளல். அதற்கிடையில் தன்னு

டைய பாங்கையும் தெளிவுபட இலங்கை வேந்தனுக்கு அவன் விளக்கிவிட்டான். "இப்பொழுது நீ மனதை மாற்றிக்கொண்டாலும் போரை நிறுத்தி விடுவோம். சீதையை நீ அபகரித்துச் சென்றது தவறுதலான செயல் என்று உணர்ந்து, அவளைத் திருப்பிக் கொடுத்துவிடுவாயானுல் பிறகு போருக்கு இடமில்லை" என்று ஒவ்வொரு படித்தரத்திலும் இராமன் எதிரிக்கு விளம்பினுன். ஆனுல் அதில் விளைந்த பயன் ஒன்றுமில்லை.

தன்னிடத்திருந்த எல்லாவிதமான அஸ்திர சஸ்திரங்களையெல்லாம் இராமன் கையாண்டாய்விட்டது. இராவணன் மடிந்தபாடில்லை. இறுதியிலே எடுத்தான் பிரம்மாஸ்திரத்தை; எதிரிக்குச் செய்யவேண்டிய எச்சரிக்கையையும் செய்தான்: "அரக்கர் கோன், இதோ நீ அழியும் நேரம் வந்துவிட்டது. இப்பொழுதும் உய்தற்கு உபாயம் ஒன்று உண்டு. செய்த குற்றத்தை உணர். சீதையை என்னிடம் சமர்ப்பித்துவிடு. உயிர் தப்பிப்போய் உன் உற்றுருடன் வாழ்ந்திரு. அல்லையேல் அழிவாய்!"

"அற்ப மானுடத் துரும்பே, உனக்கா நான் அடிபணிபவன்? சீதையை விடேன்; உன்னை நான் ஒழிப்பேன்" என்று இராவணன் சொல்லச் சொல்ல, பாய்ந்தது பிரம்மாஸ்திரம். அடியற்ற மரம்போன்று வீழ்ந்தான் இலங்கை வேந்தன்; பிரிந்தது அவன் ஆவி.

## இறுதிச் செயல்

இராவணன் மரணத்தைத் தொடர்ந்து லங்காபுரி எங்கும் ஒரே புலம்பலாய் இருந்தது. இரத்த வெள்ளத்தைத் தொடர்ந்து கண்ணீர் வெள்ளம் வந்தது. அப்புலம்பலில்

விபீஷணனும் கலந்து கொண்டான். எவ்வளவுதான் குற்றவாளி என்ருலும், மாய்ந்தவன் உடன் பிறந்தவன் அல்லவா! அனைவர்க்கும் இராமன் ஆறுதல் சொன்னுன். இராவணனுக்குப் பதிலாக விபீஷணன் சீதையை இராமன் முன் அழைத்து வந்து சமர்ப்பித்தான். பிறகு விபீஷணனுக்குப் போர்க்களத்தில் பட்டாபிஷேகம் நிகழ்ந்தது. லங்காபுரிக்குள்ளே நுழைய இராமன் மறுத்து விட்டன். அத்தனை பேர் அறியச் சீதையையே அவன் சோதித்தான். பிறர் மனையில் வாழ்ந்தவள் என்ற குற்றத்தை அவன் சாட்ட, சீதை அதைக் கேட்டுச் சகிக்க முடியாதவள் ஆனுள். தான் இனி உயிர் வாழ்ந்திருப்பதில்லை என்று தீ மூட்டி அதில் பிரவேசித்தாள். ஆனுல் அக்னி தேவதை, "அவள் தூய்மையே வடிவெடுத்தவள்" என்று பகர்ந்து, அவளை மாசற்றவளாக இராமனிடம் திருப்பிக் கொடுத்து விட்டது. அக்காட்சியைக் கண்டோர் பெரு வியப்படைந்தனர். லங்காபுரிக்குள்ளே எழுந்தருள வேண்டுமென்று விபீஷணன் வேண்டினுன். இராமன் அதற்கு மறுத்து, அவர்கள் அனைவரையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு, அயோத்திக்குத் திரும்பினுன். பிறநாடுகளில் அவன் போர் தொடுத்தது ராஜ்யத்தில் ஆசை கொண்டன்று. பொருளிலும் ஆசை கொண்டன்று. பொல்லாங்கை ஒழித்து, நல்லதை நிலைநாட்டுதற்கே ஆங்காங்கு அவன் ஆயுதம் தொடுத்துப் போர்புரிந்தான்.

## கருத்து விளக்கம்

ராம-ராவண யுத்தத்தில் அடங்கிக் கிடக்கும் கருத்து எக்காலத்திலும், எல்லார்க்கும் பயன்படக் கூடியது. வாழ்க்கை சம்பந்தமான பேருண்மை ஒன்றை இராமாயணத்தில் அடங்கியுள்ள பாத்திரங்கள் அவரவர் செயல்கள் வாயிலாக விளக்குகின்றனர். நிகழ்ந்த நிகழ்ச்சிகள் யாவும் நம்

பொருட்டே என்று நாம் வைத்துக்கொள்ளுதலிலும் பொருள் ஒன்று உண்டு. இராவணனைப் பற்றிய உண்மையை முதலில் நாம் தெரிந்துகொண்டால், ஏனைய பகுதிகள் நமக்கு எளிதாய்விடும். இராவணன் பத்துத் தலைகளை உடையவன். இதன் அடிப்படையான கருத்து ஆராய்தற்கு உரியது. இயற்கையின் அமைப்பில் அனாவசியமாய் எதுவும் ஏற்படுவதில்லை. ஒரே ஒரு தலை செய்கிற தொழிலை இரண்டு தலைகளைக் கொண்டு செய்விப்பது இயற்கையின் போக்கு அன்று. அவயவங்களை அமைப்பதில் சிக்கனமே வடிவெடுத்தது என்று இயற்கையைச் சொல்லவேண்டும். பயன்படாத எதையும் அது படைப்பதில்லை. பயன்படுபவைகளையும் அளவெடுத்து அது அமைக்கிறது. இயற்கையின் போக்கு அத்தகையதாயின், இராவணனுக்குப் பத்துத் தலைகள் எதற்காக? இரண்டு தலைகளுடன் பிறக்கும் குழந்தை ஒன்று உயிர் வாழ்வதை நாம் காண்பதில்லை. பயன்படாத உறுப்பே அதை மாய்த்து விடுகிறது. பின்பு இராவணன் எங்ஙனம் பத்துத் தலைகளுடன் வாழ்ந்திருக்கக்கூடும்? இதைத்தான் நாம் எண்ணிப்பார்க்கவேண்டும். மனதைப் பற்றிய ஒரு பேருண்மை இராவணன் மூலம் உருவகப்படுத்தி இயம்பப்படுகிறது. உருவகப்படுத்துதல் என்பது ஓர் உருவத்தின் மூலமாக ஒரு கோட்பாட்டை விளக்குதலாம். வேலை செய்தற்கென்று அமைந்துள்ள கர்மேந்திரியங்கள் ஐந்து நம் ஒவ்வொருவர் உடலிலும் உண்டு. புற உலகைப் புலப்படுத்திக் கொள்ளுதற்காக ஞானேந்திரியங்கள் ஐந்து நம்மிடத்து உண்டு. அவைகளால் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐந்தும் அறியப்படுகின்றன.

சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு

என்பது குறளின் கோட்பாடு. கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து ஆகிய பத்து இந்திரியங்கள் வாயிலாக மனது வேலை செய்கிறது. பத்து இந்திரியங்களும் மனதுக்குப் பத்துத் தலைகள் போன்றவை.

விரும்பியபடி இராவணன் ஒரு தலையுடன் இருப்பான்; ஒன்றுக்கு மேற்பட்டுப் பத்துத் தலைகளுடனும் இருப்பான். வேண்டிய வடிவங்களையெல்லாம் எடுத்துக்கொள்ளும் தன்மை அவனுக்கு உண்டு. இன்றைக்கும் இவ்வுண்மைகளை நமது மனது நிரூபித்து வருகிறது. எப்பொழுது மனது எதை எண்ணுகிறதோ அப்பொழுதே அது எண்ணிய பொருளின் வடிவத்தை எடுத்துக்கொள்கிறது. பத்து இந்திரியங்களுள் தனக்கு இஷ்டப்பட்ட இந்திரியங்களைக் கொண்டு மனது ஏககாலத்தில் வேலை செய்கிறது. ஆக, மனதின் செயல்களை இராவணனுடைய வாழ்க்கை உருவகப் படுத்தி விளக்குகிறது. இரண்டையும் சிந்தித்து ஆராய் பவனே இராவணனுடைய உருமாறும் தன்மையை நன்கு பாராட்ட முடியும். மேனியின் பேரமைப்பே வடிவெடுத்த வன் இராவணன். சுந்தர சொரூபி என்று அவனைத்தான் சொல்லவேண்டும். அவனுடைய காயம் ஒளியுடையதாய் மிளிர்ந்து கொண்டிருந்தது. தேஜஸே வடிவெடுத்தது அவனு டைய தேகம். செந்தாமரை போன்ற சிறந்த கண்களை உடையவன் அவன். ராஜ லக்ஷணத்தோடு கூடிய நீண்ட புஜங்கள் அவனுக்கு உண்டு. பொன் குடத்துக்குச் சந்தனப் பொட்டு வைத்தாற்போன்று, அவன் எப்பொழுதும் செஞ் சந்தனத்தை மேனியில் பூசிக்கொண்டிருந்தான். அதனால் அவனுடைய லாவண்யம் மேலும் அதிகரித்தது. இந்திர னுடன் போராடியபொழுது ஐராவதத்தின் தந்தங்களால் தாக்குண்டு உண்டான காயங்கள் அவனுடைய வீரத்திற்கு

அறிகுறியாக விளங்கின. அவனுடைய பருத்த தோள்களில் இந்திரனுடைய வஜ்ராயுதத்தின் அடிகள் திகழ்ந்து கொண்டிருந்தன. அவ்வாறே விஷ்ணுவினுடைய சக்ராயுதத்தின் அறுப்புகளும் அவனுடைய தோள்களில் திகழ்வனவாயின. பருத்த உடலுக்கு ஏற்றபடி தோள்களும் தக்க வலிவு பெற்று விளங்கின. சுப லக்ஷணங்களோடு கூடிய நகங்களையும் விரல்களையும் உடைய அவனது உள்ளங்கைகள் பார்ப்பதற்கு ரமணீயமாயிருந்தன. அவனுடைய இருகரங்களை இரும்புத் தடியோடு அல்லது யானையின் துதிக்கையோடு ஒப்பிடலாம். இராவணனுடைய மேனியைப் போன்று அழகும் ஆற்றலும் வாய்க்கப்பெற்ற மனதை உடைத்திருப்பது மக்களுக்கு இயலும். உடலும் உள்ளமும் என்று சொல்லுமிடத்து, பருத்த வடிவெடுத்து நின்றது உடல்; நுண்ணிய நிலையில் இருப்பது உள்ளம்.

தபசு

மனதை ஒருமைப்படுத்துதற்கு உற்ற உபாயம் தபசு. ஒருமைப்பட்ட மனதுக்கு ஆற்றல் அதிகரிக்கிறது.

> வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
> ஈண்டு முயலப் படும்.

எவ்வுலகில் எதைப் பெறவேண்டுமானாலும் அதற்கேற்ற தபசைச் செய்யவேண்டும் என்பது கோட்பாடு. "மேலைத் தவத்தளவே யாகுமாம் தான் பெற்ற செல்வம்" என்று சொல்லுதற்குக் காரணம் இதுவே. தவத்தின் மூலம் மனதின் உயர் தகுதியை உண்டுபண்ணுகிறோம். எதைப் பெறுதற்கு மனது தகுதியுடையதாகிறதோ அது எளிதில் வந்து கைகூடுகிறது. மனதைத் தகுதியுடையதாக்குதலே அனைத்துக்கும் மூலகாரணம். இம்மையில் அல்லது மறுமையில்

யார் எதைப் பெறுகின்றாரோ அவர் அதன் பொருட்டுத் தம்மைப் பக்குவப்படுத்திக் கொண்டாலே அது அடையப் படுகிறது. ஒருவன் அரசன் ஆகவேண்டுமானால் அரச னுடைய பாங்கை முதலில் மனதில் அடையவேண்டும். பிறகு புறவுலகில் அத்தகைய சூழ்நிலை தானாக வந்தமைந்து விடுகிறது. இங்ஙனம் தன்னைத் தகுதியுடையவனாக்குதல் எல்லாருக்கும் இயலும்; யாரோ ஒருசிலருடைய தனி உரிமை அன்று அது. நல்லவர், கெட்டவர் ஆகிய இருதரத்தாருக்கும் வேண்டியதைப் பெறுதற்குத் தபசு ஒன்றே உற்ற உபாயம்.

இராவணன் நெடுங்காலம் தவம் புரிந்தான். அவனு டைய தவம் நமக்கு உயர்ந்த பாடத்தைப் புகட்டுகிறது. தபசு என்றால் என்ன என்பதையும் அவனிடத்திருந்து நாம் கற்றுக்கொள்ளலாம். நெடுங்காலம் அவன் கடுந்தவம் புரிந் தான். காலம் என்பது மனதுக்கு அன்னியமானதன்று. மனது ஒழுங்குப்படும் பரியந்தம் அவன் தவம் புரிந்து கொண்டே இருந்தான் என்பது அதன் பொருள். தவம் செய்தபொழுது அவன் ஆகாரம் எதையும் எடுத்துக்கொள்ள வில்லை. இந்திரியங்கள் தத்தம் தொழிலைச் செய்யாதிருக் கும்படி அடக்குதற்கும் ஆகாரம் ஏலாதிருத்தல் என்று பெயர். ஓர் ஆயிரம் வருஷங்கள் நிஷ்டையில் கழிந்ததும் தன் பத்துத் தலைகளில் ஒன்றை அறுத்து வேள்வித் தீயில் அவன் போட்டு விட்டான். இரண்டாவது ஆயிரம் வருஷங் கள் முடிவு பெற்றதும் மற்றொரு தலையை அங்ஙனமே தீக்கு இரையாக்கினான். மூன்றாம் ஆயிரத்தில் இன்னொரு தலை சாய்ந்தது. இப்படி ஒன்பது தலைகள் போய்விட்டன. பதினாயிரம் ஆண்டின் இறுதியில் பத்தாவது தலையையும் அவன் கிள்ளத் துணிந்தான். அந்த நெருக்கடியில் படைப் புக் கடவுளாகிய பிரம்மா அவன் முன் பிரசன்னமானார். வேண்டிய வரத்தைத் தர அவரும் முற்பட்டார்.

இதுவும் மனதை ஒட்டிய உயர்ந்ததொரு தத்துவ விளக்கமாகும். நூலின் இழைகள் பலவாருகப் பிரிந்திருக்கும்போது அந்நூலை ஊசியில் கோக்க முடியாது. இழைகளை முறுக்கி ஒருமுனைப்படுத்தும் போது நூலை ஊசியில் செலுத்துவது எளிது. மனதும் அத்தகையது. பத்து இந்திரியங்கள் என்று சொல்லப்படும் பத்து வாயில்கள் வழியாக அது பொதுவாகச் சிதறடைகிறது. அப்படிச் சிதறடைய விடாது அதை ஒருமுகப்படுத்திஞல் அம்மனது வலிவு மிகப் பெறுகிறது. இது நமக்கு நன்கு விளங்குதற் பொருட்டு மற்ருெரு சான்றும் எடுத்துக்கொள்வோம். சிதறடைந்து பூமியில் விழும் சூரிய கிரணங்களைப் பூதக்கண்ணுடியின் வாயிலாக ஒருமுகப்படுத்திஞல் தீ மூட்டும் வலிவு அதற்கு வந்துவிடுகிறது. முறுக்கு நூல், போன்று வலிவையும், குவிந்த சூரிய கிரகணம் போன்று ஒளியையும் மனது பெற முடியும். அதற்காக அது அடங்கி ஒருமுகப்படவேண்டும். ஒருமுகப்பட்ட மனதுக்கு எதையும் சாதிக்கும் வலிவு வந்துவிடுகிறது. இப்பேருண்மையை இராவணனுடைய தபசு விளக்குகிறது. பிரம்மா அவனுக்குப் பிரசன்னமானுர் என்பது பிரபஞ்சத்தில் எதையும் சாதிக்கும் சக்தி அவனுக்கு வந்து விட்டது என்பதாம்.

**வரம்**

இராவணனிடத்துப் பிரீதியடைந்த பிரம்மா, அவனுக்கு வேண்டிய வரத்தைக் கேட்கும்படி ஏவிஞர். தான் என்றும் சாகாத நிலையை அடையவேண்டுமென்று இராவணன் விண்ணப்பித்தான். "அது சாத்தியப்படாது" என்ருர் நான்முகன். இயற்கைக்கு உட்பட்டிருக்கும் அனைத்துக்கும் அழியும் தன்மையுண்டு. பிரம்மாவுக்கே அழிவுண்டு. மற்ற ஜீவர்களைப்பற்றிப் பின்பு பேசுவானேன்? இவ்வுண்மையைக்

கேட்டறிந்த இராவணன் தான் முதலில் கேட்ட வரத்துக்குக் கிட்டத்தட்ட சமனுயிருந்த மற்ருெரு வரத்தை வேண்டினன். அதாவது கருடன், நாகன், யக்ஷன், தைத்யன், தானவன், ராக்ஷசன், தேவர் ஆகிய இந்தக் கணங்களால் தனக்கு ஒரு நாளும் மரணம் நேரக்கூடாது என்று விரும்பினன். மனிதர்களைப்பற்றி அவன் கவலைப்படவில்லை. ஏனென்ருல் அற்ப உயிர்களாகிய மனிதர்களிடமிருந்தா அவனுக்கு மரணம் வரப்போகிறது! அத்தகைய வரத்தைக் கேட்பது இராவணன் போன்ற பராக்கிரமசாலிகளுக்குப் பொருந்துமா?

கவிதைக்கு ஏற்ற கருத்துடன் கூடியது இராவணன் பெற்ற வரம். அவனுடைய இயல்புக்கு அது முற்றிலும் பொருந்தியதே. போற்றத் தக்க பொருள் ஒன்று அதன்கண் புதைந்து கிடக்கிறது. தேவர்களோடும் அசுரர்களோடும் சீர்தூக்கிப் பார்க்கின், மனிதன் அற்பப்பிராணி என்பது உண்மை. உடல் வலுவில் அவன் உயர்ந்தவன் அல்லன். பலவிதமான பிணிகளுக்கெல்லாம் அவனுடைய உடல் உறைவிடமாகிறது. ஆயினும் அந்த அற்ப மனிதன் ஒருவனுக்கே மனது என்னும் அரக்கனை மாய்க்க இயலும். ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து ஆகிய பத்துத் தலைகளோடு கூடியிருந்து, ஓயாது வியவகாரம் செய்யும் மனமே இராவணன் என்று சொல்லப்படுகிறது. அத்தகைய மனதை வெல்ல அல்லது கொல்ல எந்தத் தேவனுக்கும், இராக்ஷசனுக்கும், தானவனுக்கும், தைத்தியனுக்கும், யக்ஷனுக்கும் இயலாது. மனிதனகப் பிறப்பவனே மனதைக் கொல்ல வல்லவனகிருன். மனது மாய்ந்த இடமே முக்தி என்று சொல்லப்படுகின்றது. மனம் ஒடுங்கிய இடமே ஈசனது சான்னித்தியம். மனதை மாய்த்தவன் பெறுபவைகளுள் பெரியதைப் பெற்றவன் ஆகிருன்.

செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

அத்தகைய செயற்கரிய செயல் மனிதனுகப் பிறப்பவனது தனி உரிமையாகின்றது. ஆதலாலேதான் 'எண்ணரிய பிறவிதனில் மானுடப்பிறவிதான் யாதினும் அரிதரிது காண்' என்னும் கோட்பாடும் அமைகிறது.

தான் விரும்பிய வடிவத்தை எடுப்பது இராவணன் பெற்ற மற்றொரு வரமாகும். இப்பேருண்மை நம் எல்லாருக்குமே பொருந்தியுள்ளது. விரும்பிய வடிவெடுக்கும் தன்மை அவனிடத்திருந்தது போன்று நம்மிடத்திலும் அமைந்துள்ளது. ஆழ்ந்து ஒன்றை எண்ணும் தருணத்திலே மனது எண்ணப்படும் பொருளாய் விடுகிறது. ஒவ்வோர் எண்ணத்துக்கும் வடிவம் இருக்கிறது. முன்பு உண்டான எண்ணத் திரளின் உருவமே இப்பொழுது நாம் படைத்துள்ள உடல் ஆகிறது. பிறவிதோறும் நம் விருப்பத்துக்கு ஏற்றவாறு புதிய உருவத்தை நாம் எடுத்துக் கொண்டிருக்கிறோம். ஆகையால் 'காம ரூபி' (அதாவது விரும்பிய வடிவம் எடுப்பவன்) என்னும் வரப்பிரசாதம் இராவணனுக்கு இருந்தது போன்று மனதையுடைய எல்லா உயிர்களுக்கும் உண்டு. மனதில் உண்டாகும் எண்ணங்கள் தெய்வீகத் தன்மை வாய்ந்தவைகளாயிருந்தால், தெய்வத் தன்மையோடு கூடிய வடிவங்களை நாம் எடுக்கக்கூடும். கீழான தன்மை வாய்ந்தவைகளாய் நம் எண்ணங்கள் ஆய்விட்டால் நாம் கயவர் ஆய்விடுவோம்.

சாபம்

தருணம் வாய்த்த பொழுதெல்லாம் மங்கையரை எடுத்துச் சென்றது இராவணனுடைய தகாத செயலாகும். ஆட்சி

முறையில் அவன் எப்பொழுதும் அமைச்சர்களுடைய அபிப் பிராயம் கேட்பான். காமநோய் ஒன்றுக்கு வசப்பட்டிருந்த பொழுது மட்டும் அதைக் குறித்து வேறு யாரிடத்திலும் பேசான். தன் மனம் போன போக்கில் அவன் அந்நோய்க்கு இரையாகி வந்தான். கணக்கற்ற மங்கையரை அவன் மானபங்கம் செய்தவன்; சிறையெடுத்துச் சென்றவன். அத் தகைய செயல்களில் ஒன்று புஞ்சிகஸ்தலே என்னும் அழகு வாய்ந்த அப்ஸர மடந்தையைப்பற்றியது. அவள் பிரம்மாவி னுடைய அருளுக்குப் பாத்திரமானவள். இப்படி மான பங் கம் செய்யப்பட்டபொழுது படைப்புக் கடவுளிடத்து அவள் பரிந்து முறையிட்டாள். அவள் விண்ணப்பத்தைக் கேட்ட நான்முகனுக்கும் பகரவொண்ணுக் கோபம் மூண்டுவிட்டது. "நீ பர ஸ்திரீகளேப் பலவந்தமாகச் சேர்வாயாயின் உன் தலே நூறு சுக்கலாக வெடிக்கும்" என்று அவர் இராவண னேப் பார்த்துச் சாபமிட்டார். இந்தச் சாபத்துக்குப் பிறகு இலங்கேசன் பெண்களேச் சிறைப்படுத்த முடிந்ததே ஒழிய, அவர்களுடைய கற்பையழிக்க முடியவில்லே.

மனது என்னும் நமது முக்கியமான அமைப்பு எக் காலத்தும் இந்தச் சாபத்துக்கு உட்பட்டதாயிருக்கிறது. தனக்கு உரியது அல்லாதது எதையும் அது அனுபவிக்க முடியாது. அப்படி அனுபவிக்க முயலுமளவு அது சிறுமை யையே அடைந்து வருகிறது. நம்மில் பெரும்பாலோருடைய மனது நூறு சுக்கல்களாகவல்ல, எண்ணிறந்த சுக்கல்களா கச் சிதறடைந்து விடுகிறது. இந்த மனம் கொள்ளும் ஆசைக் கோர் அளவில்லே. உலகத்திலுள்ள அனேத்தையும் அது அனுபவிக்க வேண்டுமென்கிறது. அப்படி அனுபவிக்கப் புகு முன்பு தன்னேத்தானே கேள்வி ஒன்று கேட்கவேண்டும்: "இப்பொருளே அல்லது பதவியை அனுபவிப்பதற்கு எம்

முறையில் நான் தகுதியுடையவன்? இதற்கும் எனக்கும் உள்ள தொடர்பு யாது?'' நம்மை நாமே கேட்பது போன்று உலகத்தவரோடு மந்திராலோசனை செய்தாலும் நம்து உரிமையின் எல்லை நமக்கு விளங்கிவிடும். முறையுடன் பாடுபட்டு ஒன்றைச் சம்பாதித்து அனுபவித்தால் இராவணனுடைய அமைச்சர்களைப் போன்று உலகமும் அதை ஆமோதிக்கும். மனதும் அத்தகைய நற்செயலின் மூலம் திட்பத்தையும் மேன்மையையும் பெறும். ஆனால் போகத்தையும் பொருளையும் முறை தவறி அபகரிக்கின்ற மனது மற்றவர்களுடைய அபிப்பிராயங்களை வாங்கிக்கொள்வதில்லை. அதனால் அது தன்னிடத்து இயல்பாய் உள்ள தெய்வத் தன்மையை இழந்து, பலவிதமான துக்கத்துக்கு இருப்பிடமாகிறது. இராவணன் என்பதன் பொருள் 'அழச் செய்பவன், என்பதாகும். அடங்காத மனது உயிர்களை எல்லாம் அழச்செய்கிறது. தெய்வத்தின் அருள்கொண்டே இத்தகைய புல்லிய மனதை அடக்க அல்லது அழிக்க இயலும்.

# தவப் புதல்வர்கள்

## கொற்றவன் குடிகளுக்குக் கடமைப்பட்டவன்

அரசன் எப்பொழுதும் குடிகளுக்கு நல்ல எடுத்துக் காட்டு ஆகவேண்டும். நாடு ஆள்பவன் நல்லொழுக்கமே வடிவெடுத்தவனாக இருப்பது முற்றிலும் அவசியம். காட்டி னின்று நாட்டுக்குத் திரும்பி வந்திருந்த சீதாராமனிடத்து அத்தகைய சீர்மை அமையப்பெறவில்லை என்ற புகார் ஆங் காங்குக் கிளம்புவதாயிற்று. பல நாள் வேற்றொருவன் வீட்டில் அடிமைப்பட்டு வாழ்ந்திருந்த மனைவியைக் கற்பரசி என்று கொலுமண்டபத்தில் கொற்றவனோடு வீற்றிருக்கச் செய்வது முறையோ என்ற கேள்வி பிறந்தது. மனைவி விஷயத்தில் இராமன் காட்டிய வழியைப் பாமரரும் பின் பற்றினால் யாண்டும் ஒழுக்கமின்மையே உருவெடுத்துவிடும் என்ற மனத்தாங்கல் மக்களுக்கிடையே பரவி வந்தது. பிரஜைகளின் அதிருப்தி ராஜாராமன் காதுக்கும் கடைசியாக எட்டிற்று. தன் மனைவி தூயவளென்ற எதிர் வாதத்தை இராமன் செய்வது பொருந்தாது. அப்படிச் செய்தால் அது பற்றுதலிலிருந்து பிறந்த பேச்சு என்பர் மற்றவர். ராஜ பதவியில் இருந்து வந்த இராமன் செய்யக் கிடந்தது யாது என்பதை அவனே தீர்மானம் செய்துகொண்டான்.

சீதா பிராட்டி அப்பொழுது கர்ப்பவதி. அவள் வயிற் றில் வாய்த்திருந்தது எதிர்காலத்தில் அயோத்தியை ஆளு தற்கு உரிய மகவு ஆகலாம். பெண் ஒருத்திக்கு வயிறு வாய்த்திருக்கும்போது அவள் விரும்பியதை எல்லாம் வழங்க வேண்டும் என்பது விதி. ஏனென்றால், அவளுடைய மனப் பாங்குக்கு ஏற்ப அவளுக்குப் பிறக்கும் குழந்தையின் இயல் பும் மாறியமையும். சீதை கொண்டிருந்த அவா அலாதியா

ன்து. இயற்கையின் வனப்பைக் கண்டு களிப்பதில் அவளுக்குப் பெருமகிழ்வு. ஆகவே அதன் பொருட்டு அவள் காட்டுக்கு அழைத்துச் செல்லப்பட்டாள். தம்பி இலக்ஷ்மணனைத் தனியாக அழைத்து அதைக்குறித்து இராமன் ஆணையிட்டான். அவனுக்கு இடப்பட்டிருந்த கடமை கசப்பே வடிவெடுத்தது. ஆயினும் அவன் அதைச் சிரமேற் கொண்டான். வனத்தைக் கண்டு களிப்புறக் குதூகலத்துடன் சென்றாள் வைதேகி. அழைத்துச் சென்ற கொழுந்தனோ மகிழ்வுற்றிருந்தவன் போன்று வெளிக்குக் காட்டிக் கொண்டான். இருவரும் இரண்டுவித மனப்பாங்குகளுடன் வனம் போய்ச் சேர்ந்தார்கள்.

## கசப்பான கடமை

தெளிநீர் நெகிழ்ந்து பாய்ந்துகொண்டிருந்த நதி; வானுற ஓங்கி வளர்ந்திருந்த விருட்சங்கள்; அவைகளைத் தாவிப் பற்றி ஊசலாடிக் கொண்டிருந்த பூங்கொடிகள்; செண்டுசெண்டாய் அலர்ந்திருந்த மலர்கள்; நறுமணத்தைச் சுமந்து வந்துகொண்டிருந்த தென்றல்; புள்ளினங்களின் செவிக்கினிய ஓசைகள்— இத்தகைய கானக விநோதங்களைக் கண்டு கவலையற்றிருந்தாள் குலமகளாகிய சீதை. மற்றொரு புறம் கொழுந்தன் இலக்ஷ்மணன் தனக்கேற்பட்ட கொடிய கடமையை எண்ணிக் கவலையுற்றிருந்தான். தனக்குத்தானே அவன் சொல்லிக் கொள்வானாயினன்: “ஆ, அண்ணலே, தம் உத்திரவுப்படி சீதாபிராட்டியாரைக் காட்டுக்கு அழைத்து வந்தாய் விட்டது. வனத்தில் அவள் விருப்பமாய் விளையாடித் திரிகின்றாள். இன்னும் சிறிது நேரத்தில் நான் அவளை இங்கேயே விட்டு விட்டு அயோத்திக்குத் திரும்பிப் போகவேண்டுமென்பது அவளுக்குத் தெரியாது. மாசு இல்லாத மாதரசி இப்பொழுது மகிழ்ந்து குலாவித் திரிகிறாள். அதி

விரைவில் குற்றம் சாட்டப் பெற்றவளாகக் கதறிப் பதறி அழப் போகின்றாள். நேற்று அயோத்திக்கு அரசி; இன்று இரவு காட்டிலே தன்னந்தனியளாக, அழுது புரண்டு, ஆதரிப்பார் இல்லாது அல்லற்படப் போகின்றாள். ஆ! இந்த மண்ணுலக வாழ்வும் ஒரு வாழ்வா? இன்புற்றிருக்கின்றவர்களுக்குத் துன்பம் எந்த வேளையில் என்ன வடிவெடுத்து வரும் என்பதை யாருமறியார். இனி வரப்போவது யாது என்பதை இன்னதென்று காண்பியாது காலம் என்னும் திரை மறைத்து வைத்திருப்பது ஒரு விதத்தில் மிக உத்தமமானது.

"என் தமையன் ரகுராமன் கர்த்தா, நான் கருவி. அவனுக்குப் பணிவிடை செய்வதைத் தவிர வேறு ஒன்றையும் நான் அறியேன். இறைவன் ஆட்டுவித்தபடி ஆடுபவர்களுக்குத் துன்பம் ஒன்றுமில்லை என்கின்றனர் சான்றோர். ஆனால் இங்கு, நான் அவ்விதிக்கு விலக்காகிவிட்டேன். எனக்குச் சீதையும் இராமனும் ஒன்று. சீதையை வனத்தில் விட்டுவிடுவது என் கடமையாய் அமைந்திருக்கிறது. இது கொடியதில் கொடியது. ஆயிரம் தடவை சாவது எளிது; இத்தகைய கொடிய கடமையைச் செய்ய எந்த வீரன்தான் துணிவான்?"

இப்படி இலக்ஷ்மணன் பிரலாபித்துக் கொண்டிருக்கையில், சீதாதேவி அருகில் வந்து இன்புற்றிருக்க வேண்டிய இடத்தில் இளையவன் துன்புற்றிருந்ததற்குக் காரணம் யாதென்று கேட்டாள். இலக்ஷ்மணன் தன்னை உறுதிப்படுத்திக் கொண்டான். விவாதம் செய்வது வருத்தத்தை உண்டு பண்ணும். இளகிய நெஞ்சினனாய் இருந்தவன் இப்பொழுது கல்நெஞ்சினனாகத் தன்னை மாற்றிக்கொண்டான். தாய் போன்று அவன் போற்றி வந்த தேவியாரிடம் அவன் பகர்ந்த

தாவது: —"குடிகளுடைய உள்ளத்தில் உதிக்கும் ஐயங்களை அகற்றி வைக்க அரசன் ஒருவன் எப்பொழுதும் கடமைப் பட்டவன். அயோத்தி ஜனங்களுக்குத் தாங்கள் மாசற்றவர் என்பது தெரியாது. தம்மைத் துணைவியாக வைத்திருப்பது நம் அரசனுக்குப் பொருந்தாது என்று அவர்கள் முறையிட்டிருக்கின்றனர். நம் வேந்தரும் அவர்கள் சாட்டிய குற்றத்தை ஏற்றவராய்த் தம்மை இங்கு வனத்துக்கு அனுப்பி விட்டார். தாம் இனி அயோத்திக்குத் திரும்பி வரலாகாது என்பது அவரது ஆணை. தம்மைத் தெய்வம்தான் காப்பாற்ற வேண்டும். விடை தாரும்." இப்படிப் பகர்ந்துகொண்டே இலக்ஷ்மணன் மாயமாய்ச் சென்று மறைந்து விட்டான்.

சீதையின் துயரம்

சீதா பிராட்டிக்குத் தலைமீது இடி விழுந்தாற்போன்றிருந்தது இலக்ஷ்மணன் வெளியிட்ட செய்தி. அவன் மறைந்து போனது அவள் மனதில் மயக்கத்தை உண்டுபண்ணிற்று. பிரக்ஞையற்றவளாய்த் தரையில் விழுந்து கிடந்தாள். சிறிது நேரத்திற்குப் பிறகு நினைவு பெற்று எழுந்திருந்தாள். அவளுக்கு நிகழ்ந்தது நனவா அல்லது கனவா என்று யார்தான் நவில முடியும்? முன்பு இராவணன் வசப்பட்டிருந்தபொழுது தனக்கு நேர்ந்த நெருக்கடியைச் சமாளிக்க அவளுக்கு இயன்றது. ஏனென்றால் எதிரியை எதிர்க்க யாரும் கடமைப்பட்டிருக்கின்றனர். பெண் ஒருத்தியிடமிருந்து வெளிப்பட வேண்டிய வீரம் யாவும் அவளிடத்திருந்து உதித்து வந்தன. ஆனால் இப்பொழுது அவளுக்கு நேர்ந்த கேடு கணவனிடமிருந்து வந்துள்ளது. கணவனைத் தன் உயிராக அவள் கருதி வந்தவள். இராமன் உயிர்; சீதை உடல். உயிரே உடலை விட்டுப் பிரிந்துவிட்டால் பிறகு உடல் என்ன செய்ய முடியும்? தன்னை ஒரு கணப்பொழு

திலோ, அல்லது அணு அணுவாகப் பையவோ மாய்த்துக் கொள்ளும் வல்லமை சீதைக்கு இருந்தது. அன்று இராவணன் கைவசப்பட்டிருந்தபொழுது அவள் தன்னை மாய்த்துக்கொள்ளவில்லை. ஏனென்றால் தான் இராமனுக்கு உரியவளென்றும் இராமனது ஆணையின்றித் தன்னை மாய்த்துக் கொள்ளும் சுதந்திரம் தனக்கு இல்லை என்றும் அப்பொழுது கருதினாள். அதை விடக் கொடிய விபத்து இது. நாயகன் வேண்டாம் என்று விலக்கி விட்ட பிறகு யாருக்காக உயிர் வாழ்ந்திருக்க வேண்டும்? ஆக, அப்பொழுதே தன்னை அழித்துவிட எண்ணினாள். திடீரென்று மற்றொரு கருத்து அவளுடைய மனதில் தோன்றிற்று. இல்லை; தன்னை மாய்த்துவிடும் சுதந்திரத்தை இராமன் இப்பொழுதும் அவளுக்குக் கொடுத்து விடவில்லை. அவளுக்கு அவன் கர்ப்பாதானம் செய்திருந்தான். தன் வயிற்றில் அவனுடைய சொரூபத்தின் ஓர் அம்சம் வாய்த்திருந்தது. மகனாகப் பிறந்து எதிர்காலத்தில் அவன் அயோத்திக்கு அரசனாகவும் வரக்கூடும். அதைக் கருவில் காக்கும் கடமையைக் கணவன் தனக்குக் கொடுத்திருக்கிறான். ஆதலால் இப்பொழுதும் தன்னை அழித்துக்கொள்ளும் சுதந்திரம் தனக்கில்லை. இப்படி எண்ணியவுடனே அடங்காத் துயரம் அவளுக்கு வந்துவிட்டது.

## நல்ல துணை

விரைவில் அந்திவேளை வந்து கொண்டிருந்தது. அவளுடைய அழுகை எத்தகையது என்று யார்தான் வர்ணிக்க முடியும்! கல்லையும் கரைக்கக்கூடிய சோகம் அவளுடைய உள்ளத்தினின்று கிளம்பிற்று. அழுகுரலின் எதிரொலி வனாந்தரமெங்கும் வியாபித்தது. சிற்றுயிர்களும் ஸ்தம்பித்து நின்றன. நீராட நதிக்குச் சென்று கொண்டிருந்த வால்மீகி

மஹரிஷி இப்புலம்பலைக் கேள்வியுற்றார். அது கிளம்பிய இடத்தை நோக்கி விரைந்து நடந்தார். பரிதவித்திருந்த பெண்பாலைப் பார்த்தார். அவள் யாராக இருக்கக்கூடும் என்று விசாரித்தார். தனக்குற்ற தீங்கை வைதேகியும் சுருக்கமாக எடுத்து விளக்கினாள். தென்பட்டவர் யாரா யிருப்பினும் தன்னைக் காத்தருளவேண்டுமென்று எதிரே நின்ற முனிவரிடம் அவள் விண்ணப்பித்தாள். மஹரிஷியும் தம்மை இன்னார் என்று அறிமுகப்படுத்திக்கொண்டு, அருகிலிருந்த தமது ஆச்ரமத்துக்கு அவளை அழைத்துச் சென்றார். ஆங்கு ஒரு பகுதியில் வசித்து வந்த வனிதைகளுடன் வைதேகியும் வாழ்ந்திருக்கலாம் என்று ஆறுதல் அளித்தார். அத்துடன் மற்றோர் எச்சரிக்கையையும் அவர் அவளுக்கு எடுத்தோதினார். அவள் இன்னார் என்று ஆச்ரமவாசிகள் யாரும் அறிந்துகொள்ளலாகாது என்பதே அவ்வெச்சரிக்கையாகும். தவமீட்டி வாழ்ந்து வந்த மற்ற மங்கையர்களோடு இவளும் ஒருத்தியாக வதிந்திருந்தாள்.

வாழ்க்கையில் ஏமாற்றமடைவதும் துன்புறுவதும் எல்லாருக்கும் பொதுவானது. ஆனால் துன்ப நோயைத் துடைத்துக்கொள்வது சிலருக்கு எளிதில் ஆகின்றது; மற்றும் சிலருக்கு நெடுநாள் பிடிக்கின்றது. விவேகமுடையார் விரைவில் மனம் தேர்ந்து கொள்கின்றனர்; அவர்களுக்கு மற்றவர்கள் எடுத்தோதும் மேலான கருத்து விரைவில் பிடிபடுகிறது. அத்தகைய வாய்ப்பு ஒன்று வால்மீகி ஆச்ரமத்தில் அடைக்கலம் புகுந்த சீதா தேவிக்கு உண்டாயிற்று. அவள் அடைந்த ஆறுதலுக்கு ஏதுவாயிருந்த சம்பாஷணை ஆராய்தற்குரியது.

சீதை: தந்தையே, தாங்கள் தற்செயலாய் என்னைச் சந்தித்து ஆதரியாது போயிருந்தால் என் கதி என்ன

வாயிருக்கும்? குற்றமற்ற என்னை முன் எச்சரிக்கை யின்றி இப்படி வனத்தில் விட்டுச் சென்றது தர்ம மாகுமா?

வால்மீகி:—எது தர்மம், எது அதர்மம் என்று தெரிந்து கொள்வது மிகக் கஷ்டமானது. முனிவர்களே அவ் விஷயத்தில் மோகம் அடைகின்றனர். நீ அதையெல் லாம் எண்ணிக் கவலைப்படவேண்டாம். ஒரு பேருண்மை உனக்கு இப்பொழுது நன்கு விளங்குகிறதல்லவா? தூய மனமுடையவர்களுக்கு ஒருநாளும் துன்பமில்லை. யாரும் அவர்களுக்குத் தீங்கு செய்ய முடியாது. நீ திக்கற்றவள் என்று திகைத்துக்கொண்டிருந்த சிறிது நேரத்திற்குள் நல்ல துணை உனக்கு வந்துவிட்டது, பார்த்தாயா! திருவருள் என்பது இதுவே. தெய்வத்தை நம்பிக் கவலையற்று இரு.

**மேன்மக்களைப் பெறுவது எங்ஙனம்?**

சீதை:—தந்தையே, தாம் சொல்லும் உறுதிமொழி என் உள் ளத்தில் ஞான விளக்கேற்றி வைக்கிறது. என்னைக் குறித்து எனக்கு இனிக் கவலை ஒன்றும் இல்லை. வேறு ஒரு கவலைதான் இருக்கிறது. நான் இப்பொழுது கர்ப்பவதியாக இருக்கிறேன். இந்த வேளையில் வஞ்சக மாக என்னைக் காட்டுக்கு ஓட்டியது சிசு வதைக்குச் சமானமல்லவா? கஷ்டம் நிறைந்த கானக வாழ்க்கை நல்ல மக்கட்பேற்றிற்கு இடைஞ்சல் ஆகுமே, என் செய்வேன்?

வால்மீகி:—குழந்தாய், நீ இப்பொழுது அறிந்துகொள்ள வேண்டிய பேருண்மை மற்றொன்று இருக்கின்றது. உன் வயிற்றில் வாய்த்திருக்கும் சிசுவை மேலோன்

அல்லது கீழோன் ஆக்குதற்கு ஏற்ற தருணம் இதுவே. நீ இப்பொழுது அயோத்தியில் அரண்மனை வாசம் செய்தால் அது நலம்போன்று தோன்றும். ஆனால் அதில் பெருநலம் ஒன்றும் இல்லை; கேடுதான் அதிகம் நிறைந்திருக்கிறது. அதற்கு மாறாக இங்கு ஆச்ரமவாசம் பண்ணுவது கடினமானதாகத் தென்படலாம். உண்மையில் எல்லா நலனும் இதில் அடங்கியிருக்கிறது. எப்படி என்று இயம்புகிறேன் கேள். கருவிலிருக்கும் சிசுவுக்கு உன் உடலிலிருந்து நீ உணவைக் கொடுத்துப் போஷிப்பது முக்கியமானதல்ல. விலங்குகளும் அச்செயலை நன்கு செய்து முடித்துவிடுகின்றன. நீ கர்ப்பிணியாக இருக்கும்பொழுது எண்ணுகிற எண்ணங்களே முக்கியமானவைகள். மேலான எண்ணங்களை எண்ணுவாயானால், உன் வயிற்றிலிருக்கும் குழவி மேன்மையுறும். மேலான எண்ணத்திற்கு இத் தபோவனமே தகுந்த சூழ்நிலை. அயோத்தியோ சிற்றின்ப வாழ்க்கையையே நினைவுக்குக் கொண்டுவரும். இத் தபோவனம் உன்னை யோகத்தில் நிலை நிற்கச் செய்யும். அதற்கு ஏற்ற அளவு உன் சந்ததி ஞானமும், வீரியமும், பராக்கிரமமும் நிறைந்ததாகும். இதை நீ நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்வாயாக.

சீதை:— ஞானத் தந்தையே, தங்கள் கிருபையால் நான் இப்பொழுது முற்றிலும் மன அமைதி பெற்றுள்ளேன். கேடு போன்று தென்படுவதிலும் நலம் இருக்கக் கூடும் என்று நான் இப்பொழுது உணர்கிறேன். இங்கு நான் வாழ்ந்துவரும் நெறியான நல்வாழ்வே எனக்குப் போதுமானது.

ராஜபோகங்களையெல்லாம் துறந்து மறந்துவிட்டுத் தூய வாழ்வு வாழ்ந்து வந்த சீதைக்கு இரட்டையர்கள்

மக்களாகப் பிறந்தார்கள். அக்குழந்தைகளை வளர்க்கும் விஷயத்தில் வால்மீகி மஹரிஷி ஊக்கம் மிக எடுத்துக் கொண்டார். தந்தை ஆற்றவேண்டிய கடமைகளையெல் லாம் அவர் தாமே ஆற்றிவந்தார். குழந்தைகளுக்கு அவர் குசன், லவன் என்று நாமகரணம் சூட்டிவைத்தார். நாள் ஒரு மேனியும் பொழுது ஒரு வண்ணமுமாகச் சிசுக்கள் வளர்ந்து வந்தன. வடிவத்தில் சிசுக்கள் எனினும், உள்ளே அமைந்திருந்தது தெய்வீகப் பெற்றி என்பதன் அறிகுறிகள் வேண்டியவாறு தென்பட்டன. பேராற்றலும் பேரறிவும் இயல்பாகவே அச்சிறுவர்களிடம் நிறைந்திருந்தன. மஹரிஷி அக்குழந்தைகளை வளர்த்து வந்த முறையானது ஒப்பற்றது. விவேகமுடையவர்க்கே அத்தகைய சீரிய முறையைக் கையாள இயலும்.

## அடிப்படைக் கல்வி

எது விளையாட்டு, எது கல்வி என்ற வித்தியாசம் பிள்ளைகளுக்கே விளங்கவில்லை. அவர்கள் ஓயாது விளை யாடிக்கொண்டிருந்தார்கள். அவ்விளையாட்டிலேயே அவர் களுக்குக் கல்வி அடங்கியிருந்தது. கல்வி கற்கிறோம் என்ற எண்ணமின்றியே அவர்கள் எதை எதையோ ஏராளமாகக் கற்றுவந்தார்கள். வளர்கிறோம் என்ற உணர்ச்சியின்றியே உயிர்களெல்லாம் வளர்கின்றன. அங்ஙனம் ஆரம்பக் கல்வி முறையானது கற்கிறோம் என்ற உணர்ச்சியின்றியே அமை தல் வேண்டும். அதைத்தான் குசனும் லவனும் பெற்றுவந் தார்கள். அவர்களுக்கு உபநயனம் பெறத்தக்க தருணம் வந்தது. உபநயனம் என்றால் கொண்டுள்ள உயர்ந்த லக்ஷி யத்தின் அருகில் நடாத்துதல் எனப் பொருள்படுகிறது. மேலான வாழ்க்கைக்குத் தகுதியுடையவனாக மாணக்கனை ஆயத்தப்படுத்துதல் அதன் நோக்கமாகும். ஞானக் கண்

ணைப் பெறுதல் என்றும் அது பொருள்படுகிறது. தொன்று தொட்டு இந்தியாவில் வழக்கத்தில் வந்துள்ள ஓர் அறச் செயல் ஆகும் அது. வால்மீகி மஹரிஷி குசன், லவன் ஆகிய இருவருக்கும் முறையாக அச்சடங்கைச் செய்துவைத்தார். அது முதற்கொண்டு அவர்களுக்குக் கட்டுப்பாடான வாழ்க்கை துவங்கிற்று. அதிகாலையில் எழுந்திருத்தல், உடலைச் சுத்திசெய்துகொள்ளுதல், நீராடுதல், பெற்றோரை வணங்குதல், குருவை வணங்குதல், தெய்வத்தை வணங்குதல் ஆகியவைகள் நாள்தோறும் ஒழுங்காக நிகழும் நித்திய கருமங்கள் ஆயின. பெற்றோருக்கும் குருவுக்கும் பணிவிடை செய்வது நல்வாழ்வின் மற்றொரு முக்கியமான அம்சமாயிற்று. சிறியோருக்கும் பெரியோருக்கும் இடையிலிருந்த நல்லிணக்கம் பணிவிடையின் மூலம் நிலைநாட்டப்பெற்றது. சிறுவர்களும் அச்செயலை மகிழ்வோடு ஆற்றிவந்தனர். குசனும் லவனும் தங்கள் தாய்க்கு ஊக்கத்துடன் குற்றேவல் புரிந்தனர். மாத்ரு பக்தி அல்லது தாய் வணக்கம் அதன் வாயிலாக உறுதி பெற்று வந்தது. தந்தைக்குச் செய்ய வேண்டிய பணிவிடையும் குருவுக்குச் செய்யவேண்டிய பணிவிடையும் அச்சிறுவர்களுக்கு ஒன்றுபட்டுவிட்டன. வால்மீகி மஹரிஷிக்கு அவர்கள் செய்துவந்த சேவையே அவர்களுக்கு எல்லா நன்மையையும் வழங்கிற்று.

எழுதுவதும் புத்தகத்தைப் பார்த்துப் படிப்பதும் அக்காலத்தில் முக்கியமான கல்வி முறையாக அமையவில்லை. ஓதக் கேட்பதும் கேட்டதைத் தானே ஓதுவதும் அக்காலத்திய கல்வி முறையாயிற்று. 'கேள்வி முயல்' என்பதன் கோட்பாடு அதுவேயாம். குசனும் லவனும் முனிவரிடமிருந்து விதவிதமான சாஸ்திரங்களைக் கேட்டார்கள். கேட்டவைகளைத் தாங்களே ஓதும் ஞாபக சக்தியையும்

ஏராளமாகப் பெற்றார்கள். அக்கல்வி முறையில் ஞாபக சக்தியை அதிகப்படுத்துவதற்கு ஆன ஏற்பாடு ஏராளமாய் அமைந்திருந்தது. கற்றவன் ஒவ்வொருவனும் தானே நட மாடும் புத்தகசாலையாகத் திகழ்ந்தான்.

## இயற்கையே ஒப்பற்ற சூழ்நிலை

அக்காலத்துக் கல்விமுறைக்கு இயற்கையானது இன்றி யமையாத சூழ்நிலையாயிற்று. பள்ளிக்கூடமும் இயற்கையே; புத்தகமும் இயற்கை. இயற்கையென்னும் பள்ளிக்கூடத் தில் இயற்கையின் மாண்பு நிறைந்த நிகழ்ச்சிகள் என்ற பாடம் புகட்டப்பட்டது. கல்வி புகட்டியவரும், கல்வி பெற் றவர்களும் இயற்கைத் தாயின் நன்மக்கள் ஆயினர். எல்லா வேளையிலும் இயற்கையினிடத்திருந்து கற்கப் பாடம் இருந் தது. எல்லா இடங்களிலும் இயற்கையினின்று எடுத்துக் கொள்ள வேண்டிய பாடங்கள் பல இருந்தன. இயற்கை யில் நிகழ்ந்த நிகழ்ச்சி ஒவ்வொன்றும் அவர்களுக்கு அறி வூட்டி வந்தது. ஆகையாலேதான் அக்காலத்தவர்களுக்கு உயிர்வாழ்ந்திருப்பதும் பாடம் கற்பதும் ஒன்றுபட்டுவிட் டது. குசனும் லவனும் இயற்கைத்தாய் தந்தருளிய தவப் புதல்வர்களாகத் தென்பட்டனர்.

## தவச் செல்வம்

வால்மீகி மஹரிஷிக்கு ஆதிகவி என்பது ஒரு பெயர். அவர் தம் தவ மகிமையால் மஹரிஷியானார். வாழ்க்கையின் ஆரம்பப்படியில் அவர் ஒரு வேடனாயிருந்தார். சொல் எதை யும் சரியாக உச்சரிக்கவும் அக்காலத்தில் அவருக்கு இயல வில்லை. 'ராம' என்னும் மந்திரத்தை உச்சரிக்கும்படி அவருக்கு உபதேசம் கிட்டிற்று. ஆனால் அதை உச்சரிக்க அவருக்கு அப்பொழுது இயலவில்லை. ஆகையால், அதே

உபதேசம் முறைமாற்றி அவருக்குப் புகட்டப்பட்டது. 'ராம' என்பதற்குப் பதிலாக 'மரா' என்று சொல்லும்படி அவர் தூண்டப்பட்டார். தொடர்ந்து 'மரா மரா' என்று அவர் உச்சரித்துக்கொண்டேயிருந்தார். முடிவில்லாது மரா என்னும் சொல்லை உச்சரிக்குங்கால் அது 'ராம ராம' என்று ஆய் விடுமன்றோ! அப்படித்தான் அவர் ராம நாமத்தை உச்சரிக்கக் கற்றுக்கொண்டார். அதை ஓயாது உச்சரித்ததன் பயனாக அவர் ஆதிகவி ஆகிவிட்டார். அசையாது உட்கார்ந்து உச்சரித்துக் கொண்டிருந்தபொழுது அவரைச் சுற்றிலும் ஒரு வல்மீகம் வளர்ந்துவிட்டது. வல்மீகமென்றால் புற்று என்று பெயர். அதினின்று அவருக்கு வால்மீகி என்ற காரணப் பெயர் வந்தது. அவர் காலத்திலேயே வாழ்ந்து வந்த இராமனது மகிமைகளையெல்லாம் உள்ளபடி அறிந்தவரும் அவரே. இராமனுடைய திவ்விய சரித்தை ஒரு மஹாகாவியமாக இயற்றியவரும் அவரே. அந்த அரிய சரிதத்தை உலக மக்களுக்கிடையில் பிரகடனம் பண்ணவல்ல உத்தம சிஷ்யர்கள் தமக்கு வந்து அமையவேண்டுமென்று அவர் பொறுமையோடு காத்திருந்தார்.

## தலை மாணாக்கர்

குசனையும் லவனையும் பற்றி வால்மீகி மஹரிஷிக்கு எல்லாவிதத்திலும் பரமதிருப்தி. அச்சிறுவர் இருவருக்கும் அவர் வளர்ப்புத் தந்தையானார். தாய்க்கு அடைக்கலம் கொடுத்த சிறப்பு அவருடையது. தமது ஞானக் களஞ்சியத்தை ஏற்றுக்கொள்ளத் தகுந்த பாத்திரங்கள் ஆனார்கள், தாயும் அவளுடைய புதல்வர்கள் இருவரும். தங்களுடைய வரலாற்றை இன்னதென்று அறியாது அச்சிறுவர்கள் குருகுலவாசம் செய்து நலம்பெற்று வந்தனர். அதற்கெல்லாம்

மேலாக அவர் இயற்றிய இராமாயண காவியத்தை ஓதுதற்கும், பிரகடனம் செய்தற்கும் தகுந்த கருவிகள் அவர்களே என்று மஹரிஷி உணர்ந்தார். ஆக, அதை அக்குழந்தைகளுக்கு நாள்தோறும் புகட்டி வந்தார். ஞாபக சக்தியும் பேரறிவும் படைத்த இளைஞர் அதைக் கசடறக் கற்று, உள்ளத்தைக் கவரும் பாங்கில் ஓதிவந்தனர். இருபத்து நாலாயிரம் செய்யுட்களைக்கொண்ட அந் நூலை அவர்கள் நன்கு ஓதி வந்தனர். மற்றொரு பெரு வியப்பு என்னவென்றால் அந்நூல் தங்களது தாய் தந்தையரைப் பற்றியது என்பது அப்பொழுது அவர்களுக்குத் தெரியவில்லை. தாயும் அவர்களுடன் வாழ்ந்தாள். ஆனால் அவள்தான் சீதை என்பது அவர்களுக்குத் தெரியாது. தெளிந்த இனிய குரலிலே அவர்கள் அதை ஓதியபொழுதெல்லாம் தாயும் அதைச் செவிகொடுத்துக் கேட்டு ரசித்து வந்தாள். எனினும் அவள் தன்னை இன்னார் என்று தன் குழந்தைகளிடத்தும் காட்டாது வைத்திருந்தது அவளிடத்திருந்த அடக்கத்துக்குப் பேர் அறிகுறியாகும்.

தன் மனத்தகத்துப் புதைந்து கிடக்கும் இயல்புகளைச் சிறுவன் ஒருவன் விளையாட்டின் மூலமாகச் சிறிது சிறிதாக வெளிப்படுத்துகிறான். ஜன்மாந்திரங்களில் வந்துள்ள பான்மைகள் வெளியாவதற்கு விளையாட்டே முதற்காரணமாகிறது. குசனும் லவனும் விளையாட்டாக வில்வித்தை பயின்று வந்தனர். அதற்குக் குரு ஆக வால்மீகி மஹரிஷி அமையவில்லை; வெறும் தூண்டுகோலாகத் தாய் அமைந்திருந்தாள். அவர்கள் அம்பு எய்து விளையாடுகையில் அவள் அதற்கு உற்சாக மூட்டி வந்தாள். தனுர் வித்தையை அவர்கள் எப்படியோ தாமாகவே கற்றுக்கொண்டனர். அதைத்தான் பூர்வஜன்ம ஸம்ஸ்காரம் என்று சொல்லவேண்டும்.

பகையறியாத பராக்கிரமம்

அவர்களுடைய தனுர்வேத ஞானத்தை வெளியிடுதற்கான சம்பவம் ஒன்று தற்செயலாய் நேர்ந்தது. வனத்துக்குள் நெடுந்தூரம் சென்று சிறுவர் இருவரும் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய காட்சியில் நூதனமான ஜந்து ஒன்று தென்பட்டது. "என்ன விந்தை, பார், அந்த விலங்கை! பசுப் போன்றிருக்கிறது; ஆனால் கொம்பு இல்லை. இத்தகைய பிராணி ஒன்றை நான் முன்பு கண்டது கிடையாது" என்றான் குசன். "ஆம், அண்ணா, மற்றொரு விநோதத்தைப் பார். காலில் குளம்பு பிளவு படவில்லை. இரட்டைக் குளம்பு உடையனவாக இருக்கின்றன நம் ஆச்ரமத்துப்பசுக்களும் இவ்வனத்தில் திரியும் மான்களும். ஆனால் இதற்கு ஒற்றைக் குளம்பு, என்ன விந்தை!" என்றான் லவன். "ஏன், நாம் அதைக் கட்டிப்பிடித்து நம் விளையாட்டுக்குப் பயன்படுத்தலாகாது?" என்றான் மற்றவன். "ஆம், அங்ஙனம் செய்வோம் வா" என்று இளையவனும் இசைந்தான். அருகில் ஓடினார்கள். அது துள்ளிக் குதித்து ஓடியது. கட்டுக்கு அடங்காத திமிர் பிடித்தது அவ்விலங்கு. எனினும் இளைஞர்கள் அதை விடவில்லை. உற்சாகத்துடன் அதன் பின் இங்கும் அங்கும் ஓடி, அதை வளைத்துக் கட்டி விட்டார்கள்.

கட்டிய சிறிது நேரத்துக்குள் வேற்றான் யாரோ ஒருவன் அவர்கள் எதிரே தென்பட்டான். சற்று நேரத்துக்குள் அவ்வேற்றானைத் தொடர்ந்து மற்றொரு யுவன் ஓடிவந்தான். குசனும் லவனும் அவ்விளைஞனைக் கண்டார்கள். அந்த இளைஞனோ ஆச்ரம வாசிகளாகிய இச்சிறுவர்களைக் கண்டான். கண்டதுதான் பாக்கி. இருபாங்காரும் திகைத்து நின்றனர். புதிதாகத் தென்பட்ட சிறுவனிடத்து ஆச்ரம

வாசிகளுக்கு அளவில் அடங்காத் அன்பு உண்டாயிற்று. அவன் ஒரு ராஜகுமாரன் போன்று அலங்காரமாக ஆடை ஆபரணங்கள் அணிந்திருந்தான். இயற்கை அழகு பொங்கி ஜொலித்துக் கொண்டிருந்த ஆச்ரமச் சிறுவர்களை அந்த ராஜகுமாரன் உள்ளன்போடு ஏறிட்டுப் பார்த்தான். சிறிது நேரத்துக்குள் அன்பு சீற்றமாக மாறிவிட்டது. ஏனென்றால் சற்று தூரத்தில் தான் ஓட்டிவந்த குதிரை கட்டுண்டு கிடந்ததை அவ்வரசகுமாரன் கண்டான். அவன் அயோத்தியினின்று புறப்பட்டு வந்தவன், இளவரசன் இலக்ஷ்மணனுடைய புதல்வன், சந்திரகேது என்பது அச்சிறுவனது பெயர். அயோத்தியிலே நடைபெறுவதற்கிருந்த அசுவமேத யக்ஞத்துக்கு உரிய அசுவம் அது. யாகம் நடைபெறுவதற்கு முன்பு அக்குதிரையைப் பல நாடுகளில் ஓட்டிச் செல்வது வழக்கம். அதற்கு மரியாதை காட்டுபவர்கள் குதிரைக்குச் சொந்தக்காரனாகிய அரசனுக்கு மரியாதை காட்டியதன் அறிகுறியாகும். அவ்வரசனுக்குக் கீழ்ப்படிதலுக்கும் அதுவே அடையாளம். குதிரையைக் கட்டிப் பிடிக்க முயலுபவர்கள் எதிரிகள் ஆவர். பலருக்கு அதைக் கட்டிப் பிடிக்க இயலாதே போய்விடும். அவ்வளவு வல்லமை வாய்ந்தது அந்த அசுவம். பல அரசர்களுக்கு இயலாத அச்செயலை வனவாசிகளாகிய சிறுவர்கள் இருவர் செய்துவிட்டால் அது அரசாங்கத்துக்கே அவமானமாகும். அத்தகைய அவமானத்துக்குரிய செயலைக் கட்டழகு வாய்ந்த காட்டுச் சிறுவர்கள் இருவர் செய்துவிட்டனர். அதைக் கண்டுதான் சந்திரகேதுவுக்குச் சினம் பொங்கிவிட்டது.

"அடே முனிப்புதல்வர்காள்! நீங்களா இக்குதிரையைப் பிடித்துக் கட்டியவர்கள்?" என்று கேட்டான் அவன்.

"அதன் பெயர் குதிரையோ, வேறு என்னவோ நாங்கள் அறியோம். பார்ப்பதற்கு விசித்திரமான விலங்காகத்

தென்பட்டது. காட்டில் திரியும் மிருகங்களைக் கட்டி விளையாடவும், பிறகு அவிழ்த்து ஓட்டவும் எங்களுக்கு உரிமை உண்டு. அதைப்பற்றிக் கேட்க உனக்கு என்ன அதிகாரம்?" என்று ஆச்ரமச் சிறுவர்களிடமிருந்து விடை வந்தது.

"அடே, இது காட்டு விலங்கன்று. இது ஓர் அரசாங்கத்துக்குரியது. இதைக் கட்டியதன் மூலம் அவ்வரசாங்கத்துக்கு நீ பகைவன் என்று காட்டுகின்றாய்" என்றான் சந்திரகேது.

"பகைமை என்றால் என்ன என்பது எங்களுக்குத் தெரியாது. நாங்கள் விளையாடியபின் அதை அவிழ்த்து விடுகின்றோம். பிறகு நீ அதை ஓட்டிக்கொண்டு போகலாம்" என்ற விடை வந்தது தவச்சிறுவர்களிடமிருந்து.

## ஓதாது உணர்ந்த வித்தை

சந்திரகேதுவுடன் வந்தவன் குதிரையை அவிழ்க்க ஏவப்பட்டான். முனிபுதல்வர்கள் ஓர் அஸ்திரத்தை ஏவி அவனை அசையாது நிறுத்திவிட்டனர். சந்திரகேது அதற்கெதிர்ப்பாக மற்றோர் அஸ்திரத்தை ஏவி அவனை விடுவித்தான். இங்ஙனம் அஸ்திர சாஸ்திர வல்லமையில் இரு தரத்தாருக்குமிடையில் பெரும் போட்டி நேர்ந்தது. சந்திரகேதுவுக்குப் பெருவியப்பு உண்டாயிற்று. அத்தனூர் வித்தைகளில் பல உயர்ந்த பகுதிகள் இக்ஷ்வாகு வம்சத்தவர்களாகிய அயோத்தி மன்னர்களுக்கு மட்டும் தெரிந்திருந்தன. காட்டில் கனியையும் கிழங்கையும் தின்று எளிய வாழ்க்கை வாழ்ந்துவந்த தவசிகளின் புதல்வர்களுக்கு இது எப்படி விளங்கியிருக்கக் கூடுமென்று அவன் வியப்படைந்தான். இறுதியில் சந்திரகேதுவே தோல்வியடைந்தான். அதைக் குறித்து அவன் நாணமும் அடைந்தான். அப்பொழுது

அவனை எதிர்த்த சிறுவர்கள் "வீரச் சிறுவா, ஏன் ஏக்கம் கொள்கின்றனை? உன் வீரத்தை மெச்சுகிறோம். உன்னை வென்றதனால் எங்களுக்கு ஒரு பெருமையும் இல்லை. பிறரை வெல்லவேண்டும் என்ற ஆசையும் எங்களுக்கில்லை. தற்பாது காப்புக்காகவே நாங்கள் உன் அஸ்திரங்களைத் தடுத்தோம். நீ குதிரை என்று சொல்லுகின்ற இந்த மிருகத்துடன் சிறிது நேரம் விளையாடியிருப்பதைத் தவிர எங்கள் உள்ளத்தில் வேறு எண்ணம் எதுவும் இல்லை. வேண்டுமானால் இப்பொழுதே நீ அதை ஓட்டிக்கொண்டு போ" என்று பகர்ந்து கொண்டு அதை அவிழ்த்து விட்டார்கள்.

சந்திரகேது: நீங்கள் யார்? என்னை அறியாது என் உள்ளத்தில் உங்கள் மீது அன்பு சுரக்கிறது.

இரட்டையர்: நாங்கள் வால்மீகி மஹரிஷியின் ஆச்ரமத்தைச் சேர்ந்தவர்கள். யாது காரணத்தாலோ எங்களுக்கும் உன்மீது அலாதி அன்பு சுரக்கிறது; போய் வா. ஒருவேளை நாம் மீண்டும் சந்திக்கும்படி நேரிடலாம்.

ஒருவர் மீது ஒருவர் இச்சிறுவர்கள் மந்திர சக்தியோடுகூடிய அம்புகளை ஏவியது அவர்களுக்கு வெறும் விளையாட்டுச் செயல். ஆனால் ஒரு போர்க்களத்திலே எதிரியின் மீது அங்ஙனம் ஏவியிருந்தால் அது எத்தகைய பெருநாசத்தை விளைவித்திருக்கும் என்பது அச்சிறுவர்களுக்குத் தெரியாது. அவர்கள் குற்றமற்ற மனமுடையவர்கள்; ஆசைக்கு அடிமைப்படாதவர்கள்; பராக்கிரமம் அனைத்தும் வாய்க்கப் பெற்றவர்கள்; பண்பாட்டுக்கு இலக்காக விளங்கியவர்கள்! நாடு ஒன்று இத்தகைய சீரும் சிறப்பும் வாய்க்கப்பெற்ற இளைஞர்களை ஆயத்தப்படுத்துமானால் அந்நாடு பொன்னாடாகத் திகழும் அன்றோ!

குருகுல வாசம்

சீதா பிராட்டி வால்மீகி ஆச்ரமத்தில் வாழ்ந்துவந்த வாழ்வானது புற உலகின் கவனத்துக்கு உரியது அல்லாததாக இருந்தது. அதற்கு முன்பு அவள் இன்புற்றிருந்த பொழுதும், துன்புற்றிருந்த பொழுதும் பலருடைய சிந்தனையில் இருந்துவந்தாள். இப்பொழுதோ உலகம் முழுதுமே அவளை மறந்துவிட்டது என்றே பகரலாம். ஆனால் அவளுடைய ஜீவிதத்தில் மிக முக்கியமான பகுதி இதுவேயாம். வாழ்வின் ஒவ்வொரு படித்தரத்திலும் அவள் விரைந்து பண்பாடு அடைந்து வந்தாள் என்பது உண்மை. பண்பாட்டின் உச்சநிலை அவளுக்கு இந்த ஆச்ரம வாழ்க்கையில் வாய்த்தது. இடையிடையே வால்மீகி மஹரிஷியுடன் அவள் சத்சம்பாஷணை செய்து வந்தாள். ஜீவிதத்தின் முடிவான குறிக்கோள் அப்பொழுதெல்லாம் ஆராயப்பட்டது. முன்பு அவள் வாழ்ந்த வாழ்வெல்லாம் ஒரு விதத்தில் இகலோக சம்பந்தமானது. இப்பொழுது அவள் வாழ்ந்து வந்த வாழ்வு இக பரம் இரண்டுக்கும் உறுதுணையாயுள்ள தெய்வீக வாழ்வாம். அவளுடைய உடலமைப்பே இப்பொழுது வேறு ஒரு வடிவெடுத்து விட்டது. கண்ணைக் கவரும் உடல் அழகு இப்பொழுது தானாக மறைந்துவிட்டது. உள்ளத்தைக் கவரும் சீலத்தின் அழகே நன்கு பொலிவதாயிற்று. மேலாம் வாழ்க்கையில் ஒருவிதத் தெய்வீக அழகு இருக்கிறது என்பது அவ்வாழ்க்கையில் ஈடுபட்டவர்களுக்கே விளங்கும். சீதை இப்பொழுது தவத்தின் உருவாக மாறிவிட்டாள். அவள் பெயரையே ஆச்ரமத்தில் யாரும் அறியவும் இல்லை; பகரவும் இல்லை. ஆதலால் புதிய வாழ்வுக்கு ஏற்ற புதிய பெயரே யாரும் சொல்லாது அவளுக்கு அமைந்து விட்டது. வால்மீகி மஹரிஷியின் சிஷ்யை என்றுதான் ஆச்ரமவாசிகள் அவளை அறிந்திருந்தார்கள்.

ஒருநாள் மஹரிஷி தன் சிஷ்யையிடம் முக்கியமான கேள்வி ஒன்று கேட்டார். "ஞானச் செல்வியே, இவ்வுலக வாழ்க்கையை நீ இப்பொழுது எங்ஙனம் பொருள்படுத்துகின்றாய்?" என்பது அக்கேள்வியாகும். அமைதியும் உறுதியுமே வடிவெடுத்தவளாய் முகமலர்ச்சியுடன் அம்மாது அதற்குப் பதில் விடுத்தாள். அவள் இராமனை என்றும் மறக்கவில்லை; இமைப்பொழுதும் மனத்தகத்து மாறாது ஆங்கு அவன் அமர்ந்திருந்தான். ஆதலால் அயோத்திராமனாக இருந்தவன் சீதாபிராட்டிக்கு இறுதியில் ஆத்மராமன் ஆய்விட்டான். ஆதலால் அவன் அவள் மனத்தகத்தை விட்டு என்றும் பிரியாதவன் ஆய்விட்டான். அதினும் மிக்கதொரு பேறு பெறுதற்கில்லையென்று அவள் இன்புற்று இருந்தாள். உண்மையில் எல்லா ஜீவர்களும் அடையவேண்டிய முடிவான பேறு அதுவேயாம். மாண்பொருளாகிய தெய்வம் மனத்தகத்து மாறாது மிளிர்ந்திருப்பதை உணர்பவன் உயிர் வாழ்வின் குறிக்கோளை அடைந்துவிட்டவன் ஆகிறான். ஊனக்கண்கொண்டு உடல் வடிவாக இராமனைக் காணுதற்குப் பதிலாக அவள் ஞானக்கண்கொண்டு ஆத்ம இராமனைத் தன் மனது என்னும் மலர்மிசை ஓயாது தரிசித்து வந்தாள். அதையெல்லாம் கேள்வியுற்ற முனிவர் மட்டில்லா மகிழ்ச்சியடைந்தார். ஏனென்றால் அவர் ஆச்ரமம் அமைத்து வைத்திருந்ததே உயிர்களையெல்லாம் இறைவனோடு இணைத்து வைத்தற் பொருட்டேயாம்.

**மக்கள் அளித்த அருள் விருந்து**

தன் அருமைச் செல்வர்களாகிய குசன் லவனிடமிருந்து தாய் மற்றொரு பேரின்பத்தைப் பெற்றுவந்தாள். தனக்கு விருப்பம் வந்தபொழுதெல்லாம் அவர்கள் கற்றிருந்த காவியத்தை இன்னிசையுடன் ஓதும்படி அவள் வேண்டினாள்.

குழந்தைகளும் இராமாயணத்தை ஓதி அவளுடைய செவிக்கு அருள்விருந்து அளித்துவந்தனர். இராமனுடைய மகிமைகளையெல்லாம் மேலும் அவள் ஆழ்ந்து சிந்திப்பதற்கு அக்காவியம் அவளுக்குப் பெருந்துணையாயிற்று. பழைய வாழ்க்கையினின்று அவள் தன்னைப் பிரித்துக்கொண்டாள். ஒருகாலத்தில் அது தனக்கு உரியதாயிருந்தது என்பதையும் மறந்துவிட்டாள். அஹங்காரத்தை அடியோடு அகற்றியவர்களுக்கே அத்தகைய பான்மை சாத்தியமாகும். ஞானத்துக்கும் பக்திக்கும் ஏதுவாகிய நல்வாழ்க்கையில் இறங்குகின்றவர்கள் எத்தகைய சிரத்தை விசுவாசத்துடன் இராமாயணத்தைக் கேட்டு ரசித்து வருவார்களோ அத்தகைய பாங்கில் அதை அவள் ரசித்து வந்தாள். இராமாயணத்தை ரசிக்கின்ற உத்தமர்கள் எண்ணிறந்த பேர் எதிர்காலத்தில் வரப்போகின்றார்கள் என்பதை வால்மீகி மஹரிஷி அறிந்திருந்தார். அப்படி அந்த அமிர்தத்தைப் பானம் பண்ணிய பெருங்கூட்டத்தில் முதன்மை வகித்தாள் சீதை. ஏனென்றால் அத்தெய்வீகக் காவியம் தோன்றிய அதே காலத்தில் தோன்றிய இடமாகிய வால்மீகி ஆச்ரமத்திலேயே வாழ்ந்திருந்ததனால் அது அவளுக்குச் சாத்தியமாயிற்று. அதை நன்கு எடுத்து ஓதவல்ல உத்தமர்களும் சிலர் ஆங்காங்குத் தோன்றியிருந்தனர். அத்தகைய உத்தமர்களுள் தலைமை தாங்கியிருந்தவர்கள் குசனும் லவனும் அன்றோ! ஆதிகவியாகிய வால்மீகி முனிவரிடமிருந்து நேரே அதை ஏற்றுக்கொண்டவர்கள் அத்தவப் புதல்வர்கள் இருவரும் ஆவர். அவர்களுக்கு நிகரான மற்றொரு பாத்திரத்தை உலகம் இனிக்காணப்போகிறதா என்பதுதான் கேள்வி. அத்திவ்விய பாத்திரங்கள் சீதைக்கு அருமைச் செல்வர்கள்.

குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.

குழந்தையின் மழலையிலேயே மகிழ்வுறுவது தாயின் இயல்பு. இக்குழந்தைகளோ தெய்வீகம் நிறைந்தவைகள்; கலை ஞானங்களுக்கு இருப்பிடம்; பகவத் சம்பத்துக்கு விளக்கம். அத்தகைய குழந்தைகள் தனக்கே மக்களாகப் பிறந்தவர்கள். அவர்கள் ஓதியது மஹரிஷிகளையே மகிழ்வுறச் செய்யும் ராம சரிதம். அதைக் கேட்ட தாய் எத்தகைய பேரின்பம் எய்தியிருக்கக்கூடும் என்பதை நம்மால் யூகிக்கவும் முடியாது.

## பண்டைச் சர்வகலாசாலை

வால்மீகி ஆச்ரமத்தை ஒரு சர்வகலாசாலை என்று சொல்லலாம். இவ்வுலக வாழ்வுக்கு ஏதுவான கலைஞானங்கள் எல்லாம் அங்கிருந்து தோன்றுவன ஆயின. இவ்வுலகை எல்லாம்கடந்த பரஞானத்துக்கும் இருப்பிடம் அவ்வாச்ரமம். ஆங்குச் சென்று வாழ்ந்திருந்தவர்களெல்லாரும் நன்மக்களாக மாறியமைந்தனர். அங்கிருந்து சமூகவாழ்க்கைக்குத் திரும்பி வந்தவர்களெல்லாரும் சமூக நடைமுறையிலேபெரிய பொறுப்புக்களை ஏற்றுக்கொள்ள வல்லவர்களாய் இருந்தனர். ஒழுக்கத்துக்கும் நல்வாழ்வுக்கும் எடுத்துக்காட்டாக அமைந்தவர்களும் அவர்களேயாம். மரத்தினின்று நன்மலர் வருவது போன்று முனிவரது ஆச்ரமத்தினின்று மேன்மக்கள் தோன்றி வந்து கொண்டிருந்தனர். அவர்களுள் தலைசிறந்தவர்கள் ஆவர் குசனும் லவனும். இடையிடையே முனிவர் அவர்களை மற்ற ஆச்ரமங்களுக்கு அனுப்பி வைத்தார். ஆங்காங்கு நிலைத்திருந்த வேறு பல ரிஷி ஆச்ரமங்களுக்கு அவர்கள் சென்று வந்தனர். அவர்கள் சென்ற இடங்களிலெல்லாம் இராமாயணம் என்னும்ஒப்பற்ற சாஸ்திரமும் செல்வதாயிற்று. உயிரில்லாத புத்தகங்கள் வாயிலாக அரிய கருத்துக்களை வெளியிடுவது இக்காலத்து வழக்கம்.பெருவாழ்வே

வடிவெடுத்த நல்லுயிர்கள் வாயிலாக மேலாம் கருத்துக்களை வெளியில் அனுப்புவது அக்காலத்திய வழக்கம். பற்றி எரிந்து கொண்டிருக்கிற விறகுக்கட்டை மற்ற விறகுகளிலும் தீ மூட்டுவது போன்று நல்வாழ்வே வடிவெடுத்துள்ள நல்லோர்களே நலத்தை நாடெங்கும் எடுத்துச் சென்று வழங்க முடியும். உயிர் ஓவியங்களாகத் திகழ்ந்த குசனும் லவனும் ராம சரிதம் என்னும் திவ்வியாமிருதத்தைத் தவசிகளுக்கிடையிலே வழங்கி வந்தனர்.

## இராமனது பெரு வேள்வி

இராமனுடைய வாழ்க்கையில் நிகழ்ந்த பெரு நிகழ்ச்சிகளுள் அசுவமேத யக்ஞம் என்பது கடைசியானது எனலாம். அசுவமேத யக்ஞத்தை அரசன் ஒருவன் முறையாகச் செய்து முடித்தால் அவ்வரசன் பேர் அரசன் அல்லது சக்கரவர்த்தி ஆகிறான். மற்ற அரசர்களை எல்லாம் ஒன்று திரட்டி வைப்பது அதன் முதல் கடமையாகும். ஆங்காங்கு அடைபட்டும் புதைந்தும் கிடக்கும் செல்வங்களையெல்லாம் திரட்டிக் கொண்டு வந்து, பல நல்ல காரியங்களுக்குப் பயன்படும்படி செய்வது அதன் இரண்டாவது கடமையாகும். மக்கள் முன்னேற்றத்துக்கு ஏதுவான நல்ல வாழ்க்கைத் திட்டத்தை வகுத்து வைத்து, அதை அமுலுக்குக் கொண்டு வருவது மூன்றாவது கடமையாகும். நல்வழிக்கு வாராத அரசாங்கங்களைத் தகுந்த உபாயங்களைக் கொண்டு நல்வழியில் கட்டுப்படுத்துவது அடுத்த அலுவல் ஆகும். மஹரிஷிகள் போன்ற சான்றோர்களை வரவழைத்து, அவர்களை நன்கு உபசரித்து அவர்களிடமிருந்து அறநெறிகளையும் ஆத்ம ஞானத்துக்கு ஏதுவான சாதனங்களையும் பெறுவது அசுவமேத யக்ஞத்தின் முடிவான பெரு நோக்கமாகும். அந்த யாகம் தொடர்ந்து

பல மாதங்களாக அல்லது சில வருஷங்களாக நிகழ்வதும் உண்டு. மக்களுக்கிடையில் நல்லிணக்கத்துக்கு அது உற்ற தோர் உபாயம் ஆயிற்று. அப்பெருஞ் செயலைச் செய்து முடிக்க அயோத்தி மன்னன் இராமன் தீர்மானித்தான்.

மனைவி ஒருத்திக்கு வாழ்க்கைத் துணைவி என்றும் சஹதர்மிணி என்றும் பெயர். ஆடவன் ஒருவன் நற்செயல் எதில் ஈடுபட்டாலும் தன் துணைவியின் துணைகொண்டே அதைச் சாதிக்க வேண்டும். தான் அதைத் தனியாகச் செய்யுங்கால் அது அரைகுறையான செயலாகும். இராமன் அசுவமேத யக்ஞத்துக்கு ஆயத்தப்படுத்த எண்ணியபொழுது துணைவியின் உதவியில்லாது அது எங்ஙனம் நிகழ்வது என்ற ஐயம் இயல்பாகவே எழுந்தது. சீதையைக் காட்டில் தேடித் திரும்பவும் அழைத்து வந்து விடலாம் என்ற அபிப்பிராயம் ஒரு சாராரிடமிருந்து வந்தது. ஆனால் இராமனே அதற்கு இசைந்தபாடில்லை. மறுமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற யோசனை இன்னொரு சாராரிடமிருந்து கிளம்பிற்று. அதற்கும் இராமன் சிறிதேனும் இடங்கொடுக்க வில்லை. தான் ஏக பத்தினி விரதன் என்றும், அவ்விரதத்தி னின்று தான் எக்காரணத்தைக் கொண்டும் வழுவுவதில்லை என்றும் அவன் உறுதி கூறிவிட்டான். அப்படியானால் அசுவமேத யக்ஞம் முறையாக முற்றுப்பெறாது என்ற எண்ணம் மேலோர்களது உள்ளத்தில் உண்டாயிற்று. சீதையின் பிரதிமை ஒன்று பொன்னால் அமைக்கப்பெற வேண்டும் என்ற ஆணை அரசனிடமிருந்து பிறந்தது. சீதைக் குப் பதிலாக இப்பிரதிமை தன் அருகில் அமைக்கப்பெற்றி ருக்க, அதன் வாயிலாகவே அவள் செய்யக்கிடந்த அறச் செயல்களை எல்லாம் செய்து முடிக்க அவன் முடிவு கட்டி னான். அவ்வேற்பாடு முற்றிலும் யுக்தமானதென்று அறிஞர்

ஆமோதித்தனர். ஆக, வேள்விக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் விரைவில் நடைபெறலாயின.

யாகத்துக்குரிய அசுவம் என்று பிரகடனம் செய்யப்பெற்று, பல நாடுகளிலே ஓட்டப்பட்ட குதிரையும் வெற்றிகரமாகத் திரும்பிவந்துவிட்டது. அதை நடத்திச் சென்ற அரசகுமாரன் சந்திரகேதுவின் திக்விஜயமும் தடையின்றி நிறைவேறிற்று. வனத்தில் நிகழ்ந்த ஏதோ ஒரு சிறு நிகழ்ச்சிதான் திருப்திகரமானதாகத் தென்படவில்லை. அவ்வரலாறு முழுதும் இராமனுக்கு எடுத்து இயம்பப்பட்டது. அமைதியே வடிவெடுத்தவனாய் இராமன் அதற்குச் செவிசாய்த்துக் கேட்டுக்கொண்டிருந்தான். அவனது முகவிலாசத்தில் அதற்கு எதிர்ச் செயல் ஒன்றும் தென்படவில்லை. அச்சம்பவத்தை அவன் பாராட்டினானா, அல்லது அதைக்குறித்து அவன் மனம் கோணினானா என்பதை வசிஷ்டர் உள்பட முனிவர்களே யாரும் அறிந்துகொள்ள முடியவில்லை. அவன் மனத்தின் ஆழத்தை அவன்தான் அறிவான். ஆங்காங்கு ஆரண்யங்களிலிருந்த ரிஷி ஆச்ரமங்களுக்கு அழைப்புச் சென்றது. அவர்கள் எல்லாரும் அசுவமேத யக்ஞத்துக்கு எழுந்தருள வேண்டுமென்று பணிவுடன் வேண்டிக்கொள்ளப்பட்டனர். இராமனை இன்னார் என்று அறிந்திருந்த அவர்களும் ஆங்குச்செல்ல மகிழ்வுடன் இசைந்தனர். நாலாபக்கமும் இருந்த அரசர்கள் பலர் அங்ஙனமே அழைக்கப்பட்டனர். தாங்கள் அழைக்கப்பெற்றது தங்களுக்குக் கிடைத்த பாக்கியம் என்றெண்ணி, பார் ஆளும் பல வேந்தர்களும் ஆங்குப்புடை சூழ்ந்தனர். அருளாளரும் பொருளாளரும் பெருமிதமாய்க் கூடியான பிறகு, அசுவமேத யக்ஞம் துவக்கப்பெற்றது. முறையாக அது நடைபெற்றுக்கொண்டே போனது. நாடு முழுதுமே ஓர் உயர்ந்த நோக்கத்தின் பொருட்டு ஒன்றுகூடியதாக அது காட்சி கொடுத்தது.

இராமாயண அரங்கேற்றம்.

தபோதனர்களும் ரிஷிகளும் தங்கியிருந்த இடத்திற்குக் குசனும் லவனும் வந்திருந்தார்கள். தக்க தருணம் வாய்த்தபோதெல்லாம் அவர்கள் ராம சரிதத்தை முனிவர்கள் முன்னிலையில் இன்னிசையுடன் கூட்டி ஓதி வந்தனர். அவர்களைக் காணலுற்ற மேலோர் அனைவருக்குமிடையில் பேச்சு ஒன்று பரவுவது ஆயிற்று. அச்சிறுவர்கள் இருவரும் தவவேடம் தாங்கியிருந்தனர். ஆடை ஆபரணம் ஒன்றும் இல்லை. வெறும் மரவுரியும் ஜடாமுடியும், ருத்ராக்ஷ துளசி மாலைகளும், யக்ஞோபவீதமும்தான் அவர்களை அலங்கரித்தன. ஆனால் அவர்கள் மேனியினின்று மிளிர்ந்த தேஜஸ், அதன் கட்டழகு, அதன் உறுதிப்பாடு, அதன் இனிமை ஆகியவை அனைவருடைய உள்ளங்களையும் கவர்ந்தன. இராமனே பாலராமனாக மாறிவிட்டால் எத்தகைய காட்சி கொடுப்பானோ, அத்தகைய காட்சி இவ்விரட்டையர் பால் பொலிந்தது. அதைக் குறித்தே வேள்விக்காக ஆங்குக் கூடியிருந்தவர்கள் அனைவரும் வியப்படைந்தனர். அசுவமேத யக்ஞம் நிகழ்ந்துகொண்டிருக்கையில் அச்சிறுவர்களைப் பற்றிய பேச்சே மிக முக்கியமான பேச்சாக இருந்தது. ஒருவர் பின் ஒருவராகப் பலர் இராமனிடத்தும் அச்சிறுவர்களைப் பற்றிய செய்தியை எடுத்துச் சென்றனர். அவர்கள் பாடிய ராம சரிதத்தை இராமனே கேட்கவேண்டுமென்று அவர்கள் எல்லாரும் விண்ணப்பித்துக் கொண்டனர். இராமனும் அதற்கு இசைந்தான். யாகம் நடந்துகொண்டிருக்கையில் குறிப்பிட்ட வேளைகளில் அவர்கள் அரசன் முன்னிலைக்கு அழைத்துவரப்பட்டனர். அவர்கள் முதன் முதல் ஆங்குத் தோன்றியபொழுது சந்திரகேதுவானவன் திகைப்படைந்தான். அச்சிறுவர்களைத் தான் வனத்தில்

சந்தித்ததாகத் தன் பெரியப்பாவாகிய இராமனிடம் அவன் தெரிவித்தான். அவ்வார்த்தையைப் பெருக்க வேண்டா மென்று இராமன் தடுத்துவிட்டான். தொடர்ந்து சிலநாட் களாக அவர்கள் இராமாயணத்தைப் பாடி அரங்கேற்றினார் கள். இராமனது பட்டாபிஷேகம் வரையில் அச்சரிதம் இருபத்து நாலாயிரம் சுலோகங்களில் அடங்கப்பெற்றிருந் தது. கேட்டோர் அனைவரும் பரமானந்தத்தில் திளைத்திருந் தனர். அச்சரிதம் நிலவுலகில் இருக்கும் பரியந்தம் மக்களுக்கு அதினின்று ஞானப்பால் வந்து கொண்டிருக்கும் என்று முனிவர் அனைவரும் ஒன்று கூடி மொழிந்தனர்.

### காசு ஆசை அறியா இளைஞர்

பிறகு, ராஜரீதிக்கு ஏற்ப அப்பிள்ளைகளுக்குப் பொற் காசுகளும் ரத்தினங்களும் ஏராளமாகச் சன்மானமாகக் கொண்டு வந்து சமர்ப்பிக்கப்பட்டன. அக்காட்சியைக் கண்ட சிறுவர்கள் இருவரும் அருவருப்படைந்தார்கள். உலக மக்களது இயல்பு இத்தகையது என்று அவர்கள் அலக்ஷியம் பண்ணினார்கள். கழுகைப் போன்றவர்கள் உலக மக்கள் என்றனர் அத்தவச் சிறுவர்கள். கழுகு வானத்தில் உயரப் பறக்கிறது எனினும், கீழே எங்கே செத்த பிணம் கிடக் கிறதென்று அது தேடித்திரிகிறது. அதே போன்று உயர்ந்த பாரமார்த்திகப் பெரு விஷயத்தைக் கேட்ட பிறகு அதற்குக் கைம்மாறாக மனிதனை உலக பந்தபாசத்தில் கட்டிப் பிணிக் கும் பணத்தினிடத்து உலக மக்கள் கருத்தைச் செலுத்து கின்றனர். பணத்தைக் கொண்டே அனைத்தையும் மதிப்பிட முயலுகின்றனர். "ஆச்ரம வாசிகளாகிய எங்களுக்கு நீங்கள் பொற்காசு என்று சொல்லுவது துச்சம். நவரத் தினங்கள் என்று சொல்லுவது மண்ணாங்கட்டிக்குச் சமானம். இவைகளைக் கொண்டு நாங்கள் செய்யக் கிடப்பது யாது

உளது? இயற்கைத் தாய் உடலுக்கு வேண்டியதை எல்லாம் வேண்டியவாறு கொடுத்து விடுகிறாள். எங்களது உள்ளம் பரத்தைச் சார்ந்திருப்பதைத் தவிர வேறு எதையும் நாங்கள் அறியோம். உங்கள் பொற்காசு உங்களுடன் இருக்கட்டும்'' என்று வீராவேசத்துடன் இயம்பினர் வால்மீகி ஆச்ரமச் சிறுவர்கள்.

"நீங்கள் எந்த ஆச்ரமத்தைச் சேர்ந்தவர்கள்?" என்ற வினா எழுந்தது.

"நாங்கள் வால்மீகி ஆச்ரமவாசிகள்" என்றனர் இரட்டையர்.

"உங்கள் தாய் தந்தையர் யார்?" என்பது அடுத்த கேள்வி.

"வால்மீகி முனிவரே எங்களுக்கு ஞானத் தந்தையா வார். எங்களது தாய் அவருடைய ஞானச் செல்வி."

"உங்கள் தாயின் பெயர் என்ன?"

"தாயின் பெயர் தாய்."

"அப்படிச் சொன்னால் போதுமா?" என்ற வினாப் பிறந்தது.

"அனாவசியமான கேள்விகளை எல்லாம் நீங்கள் எங்களிடம் கேட்க வேண்டாம். வால்மீகி ஆச்ரம வாசிகள் என்பதில் எல்லாம் அடங்கி விடுகிறது" என்றனர் சிறுவர்.

சபையோர் திகைத்தனர். மேற்கொண்டு என்ன செய்வதென்று யாருக்கும் விளங்கவில்லை. வால்மீகி மஹரிஷியையே அரச சபையின்கண் எழுந்தருளப் பண்ணினால் என்ன என்ற எண்ணம் பலர் உள்ளத்தில் எழுந்தது. இராமனிடம் அவர்கள் அதைத் தெரிவித்தனர். இராமனும்

அங்ஙனமே செய்ய இசைந்தான். முனிவர்கள் சிலர் சென்று வால்மீகி மஹரிஷியைப் பணிவுடன் வேண்டி, ராஜசபைக்கு அழைத்து வந்தனர். எல்லாரும் எழுந்திருந்து மரியாதையுடன் அவரை வரவேற்றனர்.

## உண்மை வெளியாகிறது

பின்பு இராமனுக்கும் வால்மீகி முனிவருக்குமிடையில் சம்பாஷணை ஒன்று நிகழ்ந்தது.

இராமன்: முனி சிரேஷ்டரே, இங்கு வந்துள்ள இப்பிள்ளைகள் இருவரும் யார் என்னும் ஐயம் இச்சபையில் உள்ளவர்களுக்கெல்லாம் ஏற்பட்டிருக்கிறது. தாங்கள் தாம் அந்த ஐயத்தை அகற்றி வைக்கவேண்டும்.

வால்மீகி: அவர்கள் இரட்டையர்கள்; நம் ஆச்ரமத்தைச் சேர்ந்தவர்கள்.

இராமன்: தேவே, அது போதாது.

வால்மீகி: ஏன் போதாது?

இராமன்: இவர்களைப் பற்றிப் பலர் பலவிதமான பாங்கில் ஊகிக்கின்றனர். மற்றொரு முக்கியமான விஷயம்; இக்ஷ்வாகு வம்சத்தவர்களாகிய எங்களுக்கு மட்டும் தெரிந்துள்ள சில அஸ்திர வித்தைகளை இவர்கள் எப்படித் தெரிந்து கொண்டார்கள்?

வால்மீகி புன்னகையுடன் சபையோர் எல்லாரையும் பார்த்துவிட்டு, இனிய தெளிந்த குரலிலே, "இவர்கள் சீதாதேவியின் தவப்புதல்வர்கள்" என்று பகர்ந்தார். அவர் இயம்பிய ஒவ்வொரு பதமும் கேட்டவர்கள் உள்ளத்தில் ஆழ்ந்து சென்று பதிந்தது.

"எந்த சீதாதேவி?" என்று இராமன் சற்று வியப் படைந்தவனாக வினவினான்.

வால்மீகி: உலகு அறிய, அக்னி சாட்சியாக, உனக்குத் தர்ம பத்தினியாக நீ ஏற்றுக்கொண்ட சீதாதேவியின் புதல்வர்கள் இவர்கள்.

இராமன்: அவள் கற்புடையவள் என்று நீங்கள் இச்சபை நடுவே உறுதிமொழி கூற முடியுமா?

வால்மீகி: ராமா, உன்னை நான் ஒரு கேள்வி கேட்கிறேன். சீதை கற்புடையவளா அல்லவா என்பதைப் பற்றி உன்னுடைய சொந்த அபிப்பிராயம் என்ன?

இராமன்: அவள் கற்பினுக்கு அரசி என்பதையும், தூய் மையே வடிவெடுத்தவள் என்பதையும் நான் நன்கு அறிவேன்.

வால்மீகி: அப்படியாயின், அவள் கர்ப்பிணியாயிருந்த போது நேரில் குற்றம் ஒன்றும் சாட்டாது வஞ்சகமாக நீ ஏன் அவளை வனத்துக்கு அனுப்பினாய்?

இராமன்: அவளைப்பற்றிய ஐயம் ஒன்று குடிகளில் பலர் உள்ளத்தில் புகுந்துவிட்டது. என் மனைவி குற்றமற்ற வள் என்று நான் பிரஜைகளுக்குச் சமாதானம் சொல்லு வது சிறிதும் பொருந்தாது. குடும்பவாழ்க்கை விஷயத் தில் அரசன் குடிகளுக்கு வழிகாட்டியாக இருந்தாக வேண்டும். பிரஜைகளின் பிரதிநிதியாக நான் இப் பொழுது இப் பெரிய சபை நடுவே அவள்மீது குற்றம் சாட்டுகிறேன். தவ வேந்தராகிய தாங்கள், அவள் தூய்மையே வடிவெடுத்தவள் என்று நிரூபிக்கமுடியுமா?

வால்மீகி: சீதா தேவியின் தூய்மைக்கு சீதா தேவியே சான்று. வேறு எவரிடத்திருந்தும் பாதுகாப்பை எதிர்

பார்க்கின்றவள் அவள் அல்லள். இதோ, இப்பொழுது அவளை நான் இப்பேரவையின்கண் வரவழைக்கின்றேன். சீதாபிராட்டி எத்தகையவள் என்பதை மண்ணவரும் விண்ணவரும் கண்டுகொள்வீர்களாக.

### சீதையின் சபதம்

இங்ஙனம் அவர் பகர்ந்ததும், அவருடைய ஆச்ரமத்தைச் சேர்ந்தவர்கள் சீதையை அழைத்து வந்தார்கள். அவளுடைய வருகையை அத்தனை பேரும் கூடி இமைகொட்டாது பார்த்துக்கொண்டிருந்தனர். எங்கும் ஒரே நிசப்தம் குடிகொண்டிருந்தது. சீதையின் வருகையில் சாந்தமும், தெளிவும், உறுதியும் மிளிர்வனவாயின. அவளது நடையே அவள் இம்மண்ணுலக வழக்கு எதிலும் கட்டுப்பட்டவள் அல்லள் என்பதை விளக்கிற்று. அவளுடைய மனது ஒரு விதமான உயர்ந்த பரவசநிலையில் இருந்தது. சபைக்குள் வந்ததும் அவள் பகர்ந்ததாவது:—

"தந்தை தாயற்ற எனக்கு ஐம்பூதங்களில் முதல் பூதமான பூதேவி ஆதரவுடன் அன்னையானாள். மிதிலாபுரி மன்னர் எனக்குத் தந்தையானது பெயரளவிலேயாம். பின்பு, இங்கு வீற்றிருக்கும் பிரபு என்னைக் கொண்டவர் ஆனார். அவருக்கு ஏற்பட்ட உடைமையும் வறுமையும், இன்பமும் துன்பமும், மேன்மையும் கீழ்மையும் எனக்குச் சொந்தமாயின. நான் கணவனைத் தெய்வம் எனக் கருதிக் கானகம் சென்றேன். அப்போது முட்களிலும் கற்களிலும் என் பாதங்கள் வருந்தாது பூதேவி காத்தருளினாள். பர்ணசாலையில் தனியாயிருந்த என்னை அரக்கன் தூக்கிச் சென்றான். அப்பொழுதும் என் தூய்மைக்கு அவளே சாட்சியாக இருந்தாள். அசோக வனத்தில் நான் சிறை கிடந்தேன். கொடிய அரக்கியர்கள் பலர் என்னைப் பயமுறுத்தினர். ஆயினும்,

பயம் எதையும் நான் அறிந்தவள் அல்லள். அந்நெருக்கடியிலும் எனது மாசற்ற மனதுக்கு பூதேவியே சாட்சியானாள்.

"இரண்டாம் பூதமான தண்ணீரும் தன்னளவில் எனக்குத் துணைபுரிந்து வந்தது. சிறைபட்டுக் கிடந்த என்னைத் தேடிவந்த மணாளனுக்குத் தடையாக இருக்கக் கூடாது என்று தனது தன்மைக்கு மாறாகப் பாலம் கட்ட அது உதவியது. மூன்றும் பூதமான தீயும் தென் இலங்கையில் எனக்கு வேண்டியவாறு துணைபுரிந்தது. என்னைத் தேடிவந்த தொண்டன் ஆஞ்சநேயன் இலங்கையில் தீயிட்டுக் கொளுத்தியபொழுதும் நான் இருந்த இடத்துக்கு ஆபத்து வராது அப்பூதம் என்னைக் காப்பாற்றிற்று. எனது பக்தனை அவ் ஆஞ்சநேயனுடைய வாலில் அது குளிர்ந்திருந்து என் தூய்மையை வெளிப்படுத்தியது. பிறகு என்னைச் சோதிக்க வேண்டுமென்று என்னைக் காக்கவந்தவர் கருதினர். அதற்கிணங்கி நான் தீக்குளித்தேன். அந்நெருக்கடியிலும் அக்கினி தேவதை என்னைக் காப்பாற்றிற்று. நான்காவது பூதமாகிய வாயுவானது தன் புதல்வனையே என்னைக் காணுதற் பொருட்டுக் கொடுத்து உதவிற்று. ஆகாயமும் அவ்வாறே எல்லாக் காலங்களிலும் என் தூய்மைக்குச் சாட்சியாக இருந்து வந்திருக்கிறது.

"ஐந்து பூதங்களாலாகிய இவ்வுடலினுடைய தூய்மைக்கும், என் சொல்லினுடைய தூய்மைக்கும், மனதினுடைய தூய்மைக்கும் ஐம்பூதங்களே சாட்சிகளாகும். அவற்றிடமே என்னைப் பங்கிட்டுவிடப் போகிறேன்.

"என் ஞானத் தந்தையாகிய வால்மீகி மஹரிஷியின் அருளினால் என் தவக்குழந்தைகளுக்கு உயர்ந்த கல்வியும், பயிற்சியும், பாதுகாப்பும் கிடைத்தன. அக்குழந்தைகளின் தந்தை, இதோ, இந்த யாகத்துக்கு எஜமானனாக வீற்றிருக்

கும் ராகவப் பிரபு, அவர்களை மனமுவந்து ஏற்றுக்கொள்வாராக. இது ஒன்றே எனது விருப்பம். என் கணவனைத் தவிர வேறு எவரும் அறியமுடியாத, எவர்க்கும் கிட்டாத உயர்ந்த அஸ்திரங்கள் என் மைந்தர்களுக்குத் தாமாகவே தோன்றியது ஒன்றே என் தூய்மைக்குச் சான்று ஆகும்.

"முனிவர்கள் இத்தனைபேரின் போற்றுதலுக்குரிய வால்மீகி முனிவர் என்னை ஏற்றுக் காத்து வந்துள்ளது நான் தூயவள் என்பதற்கு மற்றொரு சாட்சியாகும்.

"எக்காரணத்தை முன்னிட்டும் என் ஆருயிர்த் துணைவன் ரகுபதியின் மீது நான் ஒருபொழுதும் சினந்துகொண்டதில்லை. அவர் இராவணனைக் கொன்றபின் நான் ஆவலுடன் அவர் அருகில் வந்தேன். அவரோ தாங்கவொண்ணக் கடுஞ்சொல் சொல்லி என்னை விரட்டினர். அதற்கு நான் அவரைச் சிறிதும் நொந்துகொள்ளவில்லை. முன் அறிவிப்பில்லாது என் கணவன் என்னைக் கானகத்துக்குக் கடத்திவிட்டார். அதைக் குறித்தும் நான் அவரிடம் சினந்துகொள்ளவில்லை. அரச குலத்தில் தோன்றி, ராஜஸ்ரீயுடன் வாழ்தற்கிருந்த என் புதல்வர்கள் தங்கள் தந்தை இன்னர் என்று தெரியாது வனத்தில் வாழ்ந்த போதோ அவர்களுக்குத் தாய் ஆகிய என்னைப்பற்றிய உண்மையை அவர்கள் அறியாது வாழ்ந்தபோதோ என் தலைவன்மீது நான் தீய எண்ணம் எதையும் எண்ணவில்லை. எனது மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரணங்களும் எந்நாளும் அவருக்கு உரியவைகளே. இது சத்தியம். இப்பொழுதும் மாருத அதே அன்பை நான் அவர்பால் கொண்டுள்ளேன்.

"என் அருமைச் செல்வர்காள்! தக்க இடத்தில் உங்களை நான் இப்பொழுது ஒப்படைத்துவிட்டேன். இப்பெருங்

கூட்டத்துக்குத் தலைவராக வீற்றிருப்பவர்தான் உங்கள் தந்தை. நீங்கள் இதுகாறும் பல இடங்களில் பாடி அரங் கேற்றிய இராமாயணம் உங்கள் தந்தையைப் பற்றியது என்பதை இப்பொழுது அறிந்துகொள்ளுங்கள். உங்கள் தந்தையுடன் கூடியிருந்து இனிச் சுகமாக வாழுங்கள். தாயின் உண்மை நிலையையும் இப்பொழுதுதான் நீங்கள் தெரிந்து கொண்டிருக்கிறீர்கள். இதைத் தெரிந்தான பிறகு இதைக் குறித்து இனி நீங்கள் அடையும் மகிழ்வைக் காணும் வாய்ப்பு எனக்கில்லை. தந்தையோடு கூடியிருந்து நீங்கள் அடையும் பேரின்பத்தைக் கண்டு மகிழும் வாய்ப்பும் இனி எனக்கில்லை. நீங்கள் அடையவேண்டிய இடத்தை அடைந் தாய்விட்டது என்பது ஒன்றே எனக்குப் போதுமானது.

"என் ஆருயிர்த் துணைவா, என்னை மணந்த மணாளா, நம் இருவருக்குள் எப்பொழுதும் மன வேற்றுமை இல்லை. ஆனால் நீங்கள் என்னை மணந்து பெற்ற இன்பம் எதுவு மில்லை. மணந்த சிறிது காலத்தில் நீங்கள் காட்டுக்குச் செல்லவேண்டி நேரிட்டது. ஆங்குத் தங்களுக்கு நேர்ந்த இடைஞ்சல்களெல்லாம் என்னை முன்னிட்டே. இனி நான் தங்களை விட்டுப் பிரிவதனால் புதிதான துன்பம் உங்களுக்கு ஒன்றும் ஏற்படப்போவதில்லை. சிறுமியாயிருந்து தந்தைக்கு நான் ஆற்றவேண்டிய கடமைகளையெல்லாம் ஆற்றியாய் விட்டது. தங்களைச் சரண்புகுந்து தங்களுக்கு நான் புரிய வேண்டிய கடமைகளையும் நிறைவேற்றியாய்விட்டது. இறு தியில் தங்கள் செல்வர்களின் பொருட்டே நான் உயிரைத் தாங்கி வைத்திருந்தேன். அவர்களைத் தங்களிடம் ஒப்படைப் பது எனது கடைசியான கடமையாகும். அதையும் நிறை வேற்றிவிட்டேன். கருணை கூர்ந்து அவர்களை ஏற்றுக் கொள்வீர்களாக

"அருமை மைத்துனர்களே, இங்குக் குழுமியுள்ள உற்றார் உறவினர்களே, ஞானத் தந்தை வால்மீகி முனிவரே, உங்கள் அனைவரிடமிருந்தும் விடைபெறுகிறேன். அன்னை பூமாதேவீ, என் தூய்மையை நீ நன்கு அறிவாய். மற்றவர்கள் சில வேளைகளில் என்னைப் பார்த்தவர்களாகவும், வேறு சில வேளைகளில் என்னைப் பார்க்காதவர்களாகவும் இருந்திருக்கிறார்கள். நீயோ நான் பிறந்தது முதல் இது பரியந்தம் என்னைத்தாங்கி வைத்திருந்தாய். எந்நிலையில் நான் எங்கு இருந்திருந்தாலும் அந்நிலையில் ஆங்காங்கு எனது இயல்புக்கு நீ சாக்ஷியாய் இருந்திருக்கின்றனை. என் தூய்மையை நீயே நிரூபிப்பாயாக. உன்னிடமே அடைக்கலம் புகுகிறேன். பெற்ற தாயினும் சாலப்பரிந்து உன் விசாலமான உடலிலே எனக்கோர் இடம் அளிக்கமாட்டாயா?"

இங்ஙனம் பரிவுடன் பகர்ந்துகொண்டு சீதாபிராட்டி கைகூப்பி நின்றாள். உள்ளங்கசிந்த மற்றவர்கள் அதை முற்றும் காண்பதற்கு முன்பே பூமாதேவி பரிந்து சீதையைத் தன்பால் எடுத்து மறைத்துக்கொண்டாள்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நாடக நூல்கள்

மாணவ, மாணவிகளும் மற்றும் அனைவரும் படித்து எளிதில் புரிந்துகொள்ளும்படி இயற்றப்பட்டுள்ளன. இவை ஒவ்வொருவர் வீட்டிலும் நூல்நிலையத்திலும் வைத்துப் பயன்படுத்த வேண்டிய நூல்களாகும்.

| | | ரூ. பை. |
|---|---|---|
| 1. | ஹரிச்சந்திரன் | 2-00 |
| 2. | பாதுகா பட்டாபிஷேம் | 1-75 |
| 3. | விரதவீரர் பீஷ்மர் | 1-50 |
| 4. | விபீஷணன் சரணுகதி | 1-50 |
| 5. | வாலி மோட்சம் | 1-00 |
| 6. | தவப் புதல்வர்கள் | 1-00 |
| 7. | ஏகலைவ்யனின் குருபக்தி | 1-00 |
| 8. | பார்வதி, லட்சுமி, சரஸ்வதி கர்வபங்கம் | 1-00 |
| 9. | தான வீரன் கர்ணன் | 1-00 |
| 10. | மார்க்கண்டேயன் | 1-00 |
| 11. | பிரஹ்லாதன் | 1-00 |
| 12. | தபோபலன் | 1-00 |

*தபால் செலவு தனி. ஷ 12 புத்தகங்களையும் தபால் மூலம் பெற விரும்புகிறவர்கள் தபால் கட்டணத்திற்காக ரூ. 5/ சேர்த்து அனுப்பிப் பெறலாம்.*

# தர்ம சக்கரம்

## மாத சஞ்சிகை

ஆசிரியர் சுவாமி நித்தியானந்தர்

1952 ஜனவரி முதல் வெளிவந்துகொண்டுள்ளது

| | ஆண்டு சந்தா | தனி இதழ் |
|---|---|---|
| உள்நாடு | ரூ. 15-00 | ரூ. 1-50 |
| வெளிநாடு | ரூ. 45-00 | ரூ. 4-00 |

ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிப் பதற்குப் பதிலாக ரூபாய் நூற்றைம்பது டிபாசிட் செய்து விட்டால் தொடர்ந்து மாதந்தோறும் பத்திரிகை வந்து கொண்டிருக்கும். பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாசிட் செய்த முழுத்தொகையாகிய ரூபாய் நூற்றைம்பதையும் திரும்பப்பெற்றுக் கொள்ளலாம். டிபாசிட் முறை வெளிநாட்டுக்கு இல்லை. விபரத்திற்கு எழுதக்கோருகிறோம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா

## சுவாமி சித்பவானந்தர் அவர்கள் இயற்றிய
## பெரிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | ரூ. | 32-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 16-ம் பதிப்பு | ... | 28-00 |
| ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் (தமிழ் வியாக்கியானம்) | ... | 26-00 |
| ராஜயோக விளக்கம் | ... | 12-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 10-00 |
| மஹாபாரதம் | ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 9-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 8-00 |
| விவேகானந்த விவரணம் | ... | 7-50 |
| இராமாயணம் | ... | 7-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 7-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... | 7-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசமஞ்ஜரீ | ... | 6-50 |
| தாயுமானசுவாமி பாடல்கள் | ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... | 5-50 |
| தினசரி தியானம் | ... | 5-00 |
| அம்பிகையின் ஆயிரம் திருநாமங்கள் | ... | 4-50 |
| விஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்கள் | ... | 4-00 |
| சிவனின் ஆயிரம் திருநாமங்கள் | ... | 4-00 |
| சகோதரி நிவேதிதை | .... | 3-75 |
| சுவாமி விவேகானந்தர் | ... | 3-50 |
| பஜனைப்பாடல்கள் | ... | 3-50 |
| எதிர்கால இந்தியா | ... | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... | 3-00 |

விலை ரூ. 2-50